

# NAGARATHAR

(MONTHLY)

61-D, USMAN ROAD, MADRAS-17

---

## ADVERTISEMENT TARIFF

Effective from 1-4-1969

### CASUAL RATES

| | | | |
|---|---|---|---|
| Full page | ... | Rs. 100 | per insertion |
| Half page | ... | Rs. 60 | ,, |
| Quarter Page | ... | Rs. 30 | ,, |

### COVER PAGES

| | | |
|---|---|---|
| Back Cover | ... | Rs. 250 |
| Inside Covers | ... | Rs. 150 |

Advertisements in COLOUR are accepted at a premium of 25% for each extra colour

**Contract Rates:** 20% less over above rates for a minimum of SIX insertions in a year.

### MECHANICAL DATA

| | | |
|---|---|---|
| Size of Printed Page | ... | 18 C.M. × 10 C.M. |
| Size of Printed ½ Page | ... | 18 C.M. × 5 C.M. |
| | | or |
| | | 9 C.M. × 10 C.M. |
| Size of Printed ¼ Page | ... | 9 C.M. × 5 C.M. |
| | | or |
| | | 4½ C.M. × 10 C.M. |

Half - Tone blocks upto 85 screens accepted

Blocks - Stereos - Matrices Acceptable.

Last date for receiving materials, cancellation or revision— 15 days before the date of Publication.




# நகரத்தார்

திங்கள் இதழ்

61, D, உசுமான்சாலை - சென்னை-17

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு

சாதாரண-பங்குனி மார்ச்-1971

ஆசிரியர் — புலவர்நாகசண்முகம்

பரிந்துரையாளர் — எஸ். பிஎல். பழநியப்பா பி.ஏ., பி.எல்.

குறிப்பு இரண்டு — பேரேடு மூன்று


## மனு நீதி

கற்பனைக் கதைகளைவிடச் சில வேளைகளில் உண்மைகள் வியப்பானவைகளாக விளங்குகின்றன.

வியப்போடு நின்றுவிட்டால் மகிழ்ச்சிதான்! அது வேதனையாக மாறும்போது அந்தச் சோதனைக்கு யார் காரணம்? என்ன காரணம்? என்று எண்ண வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டு விடுகிறது.

இந்த எண்ணத்திற்குச் சாதி, மதம், சொல்லப்போனால் நாடு கூட, குறுக்கே நிற்க முடியாது.

நீதிக்கு எல்லை ஏது?

மருத்துவக் கல்லூரிக்கு விண்ணப்பித்த குழிபிறை பெரிய கருப்பனைப் பற்றி எண்ணுகிற பொழுது நமக்கு வியப்பும் வேதனையும் நிறைந்த ஓர் உணர்ச்சியே ஏற்படுகிறது.

பெரியகருப்பன் தகுதி, அவருக்கு இருமுறை மருத்துவக் கல்லூரியில் இடம் கிடைக்காமல் போனது, பின்னர், தம் திறமையையே முதலாக வைத்து சுப்ரீம் கோர்ட்டில் நீதி கேட்டது, அவர்களுடைய அனுதாபம் மிகுந்த தீர்ப்பு அதன் பிறகும் அவருக்கு இடம் கிடைக்ாத நிலை—ஆகியவை இன்று நாட்டு மக்களால் நன்கு அறியப்பட்டவையாக விளங்குகின்றன. எனவே அது பற்றி விளக்கம் தருவதற்காக நாம் இதை எழுதவில்லை.

சோழ நாட்டில் வணிகர் குடியில் பிறந்த கண்ணகிப் பெண்ணுக்குப் பாண்டிய நாட்டில் வேந்தன் அவையில் நீதி கேட்கும் உரிமை இருந்தது. அந்த அரசில் அவ்வளவு எளிமை திகழ்ந்தது. இந்த உண்மையை – சிலம்பின் சிறப்பினை, உள்ளவாறு உணர்ந்த பெருமை தமிழக முதல்வர் கலைஞருக்கு உண்டு. சான்று, அவர்கள் படைத்த சிலம்பின் புதுமை வடிவமான பூம்புகார்! நீதியை அறிவதில் எளிமையும் செயல் மேற்கொள்வதில் எல்லையற்ற விரைவும் அவர்களிடம் உண்டு.

பூம்புகார் கண்ட கலைஞர் அவர்களுடைய ஆட்சியில் பெரிய கருப்பன் தம் முயற்சியில் நான்காம் முறையும் தோல்வி அடையும் நிலை நேர்ந்ததை எண்ணுகிற பொழுது அது பெரியகருப்பனுடைய தோல்வி என்று நம்மால் எண்ண முடியவில்லை. காரணம் தலைமை நீதிமன்றமே (சுப்ரீம் கோர்ட்டு) அவருடைய தகுதி பற்றிக் குறிப்பிட்டு அவருக்கு இடம் கிடைக்காதது பற்றி வருந்தியிருக்கிறது.

அதிகாரிகளை மக்கள் சென்று கண்ட நிலையை மாற்றி, மக்களை அதிகாரிகள் வந்து பார்த்துக் குறைகளைக் கேட்கும் மனுநீதி முறையை உருவாக்கிய பெருமை பெற்ற நமது அரசில் பெரிய கருப்பனுடைய மனுவுக்கு (Petition) நிச்சயம் நீதி கிடைக்கும் என்ற நம்பிக்கை நமக்கு முழுமையாக உண்டு.

பெரிய கருப்பனுக்கு இதுவரை இடம் கிடைக்காததற்குக் காரணம் என்ன என்று ஆராய்வது நமது வேலையில்லை. பெரிய கருப்பனுடைய கோரிக்கையைத் தனிப்பட்ட ஒருவருடைய கோரிக்கையாக அரசு கருதமாட்டாது என்பதுதான் நமது எண்ணம்.

அரசு, அன்னையைப் போல விளங்கவேண்டும் என்பதுதான் நமது ஆசை, தவறு செய்கிற பிள்ளையைக் கூட அன்னை தழுவிக் கொள்வாள், தகுதி மிக்க பிள்ளையை அவள் புறக்கணிக்கக் கூடாதல்லவா?

புறக்கணிக்க மாட்டாது என்று திடமாக நம்புகிறோம்.

# வாழ்த்தி வரவேற்கிறோம்

மாணவர் உலகை வருங்காலச் சிற்பிகள் என்றே அனைவரும் கருதுகிறார்கள். பூசல், பொறாமை – அநீதி, கொடுமை – முதலிய தீமைகள் எல்லாம் ஒழிந்து புதிய சமுதாயத்தை-அமைக்க வேண்டிய பொறுப்பு அவர்களிடம்தான் இருக்கிறது.

எனவே அவர்கள் கற்கும் காலத்திலேயே கூட்டுறவு முறையில் நன்மையை நிலைநாட்டும் வழியில் சங்கங்கள் அமைத்துச் செயல்படுவது வாழ்த்தி வரவேற்கத்தக்கதாகும்.

மதுரை நகரத்தார் மாணவர்கள் அண்மையில் சங்கம் ஒன்றைத் தொடங்கியிருப்பது அறிந்து பேருவகை அடைகிறோம். சங்கம் வைத்து மொழி வளர்த்த மதுரையில் தொடங்கியுள்ள அச்சங்கம் நம்மரபினரிடம் உள்ள குறைபாடுகளை நீக்கி மரபிற்கும் நாட்டிற்கும் எல்லா நன்மைகளும் பெருக அருந் தொண்டாற்றும் என்ற முழு நம்பிக்கையுடன் வாழ்த்தி வரவேற்கின்றோம்.

# பர்மியத் தலைநகரில் தைப்பூச விழா

பர்மியத் தலைநகர் ரெங்கோனில் மூன்று நாள் தைப்பூச விழா கோலாகலமாகக் கொண்டாடப் பட்டது. முகல் வீதியிலுள்ள ஆறறை திருக்கோயிலிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள பசுமந்தான் நகரத்தார் மடத்திற்கு, 8-2-71 திங்கட்கிழமை காலையில் நன்கு அலங்கரிக்கப் பட்ட ரதத்தில் ஸ்ரீ முருகப்பெருமானை எழுந்தருளச் செய்து நகரின் பிரதான வீதிகளின் வழியாகப் புறப்பட்ட ஊர்வலம் நகரத்தார் மடத்திற்கு வந்து சேர 6 மணி நேரம் பிடித்தது. ரெங்கோன் தேவாரக் குழுவினர், சுந்தரவிநாயகர் ஆலய பசனைக் கோஷ்டியினர், சந்திரோதயக் கலா மன்றத்தினர், ஆகியோர் தேவார, திருவாசகப் பாடல்களைப் பாடி பக்தர்களை மகிழ்வித்தார்கள். பர்மா இந்து தமிழ் மன்றத்தின் தொண்டர்கள் போக்குவரத்துக்களைச் சீர்செய்து வந்தார்கள். சுவாமி சேர்க்கை சேர்ந்ததும் பக்தர்களுக்குப் பகல் உணவு அளிக்கப்பட்டது. அன்று மாலை, ஆசிரியர் சுப. முத்துவேல் தயாரித்த வள்ளி எனும் புராண நாடகம் சிறுவர் சிறுமியர்களைக் கொண்டு மிகவும் சிறந்த முறையில் நடைபெற்றது. இரவில் பர்மியப் புரட்சி சர்க்காரும் இந்தியத் தூதுவராலயத்தினரும் சேர்ந்து பர்மிய இந்தியத் திருக்கோவில்களைப் பற்றிய சினிமாப் படக் காட்சியைக் காண்பித்தார்கள். இங்கு தற்போது தமிழ் சினிமா படம் காண்பிக்கப்படுவதில்லை. ஆகவே பொது மக்கள் இந்திய தூதுவராலயத்தினர் காட்டிய தஞ்சாவூர், மதுரை, பரத நாட்டியம் போன்ற படங்களைத் தமிழ் வர்ணனையுடன் பார்த்தபோது ஆரவாரம் செய்து தங்களின் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். படம் பார்த்தவர்கள் பர்மியப் புரட்சி சர்க்காரையும், இந்தியன் எம்பாசியையும் பாராட்டிச் சென்றார்கள்.

9 உ. செவ்வாய்க்கிழமை தைப்பூச நாளன்று பசுமந்தான் கோவிலிலுள்ள ஸ்ரீ தெண்டாயுதபாணிக்குச் விஷேச அபிஷேக ஆராதனை வழிபாடுகள் நடைபெற்றன. ஸ்ரீ தெண்டாயுதபாணிக்குச் சுவர்ண அங்கி சாத்தி இருந்ததையும், மடத்தில் எழுந்தருளி உள்ள உற்சவமூர்த்தி ஸ்ரீ முருகப்பெருமான், வள்ளி, தெய்வானையுடன், சுவர்ண அங்கிகளால் அலங்கரித்திருந்ததையும் ஆயிரக்கணக்கில் பக்தர்கள் திரண்டு வந்து தரிசித்தார்கள். சாதி மத பேதமின்றித் தைப்பூச விழாக் காண வந்திருந்த ஆயிரக் கணக்கான மக்களுக்கு அன்னதானம் வழங்கப்பட்டது. அன்னமிடும் தொண்டில் முனீஸ்வரர் ஆலயக் குழுவினர், 57-வது வீதி பொது நலக் குழுவினர், கம்பை கலைமகள் மன்றத்தினர், 48-வது வீதி இளைஞர் குழுவினர், நடராசர் ஆலயப் பொதுநலக் குழுவினர், கம்பை கலைமகள் மன்றத்



பசுமந்தான் கோயில் தண்டாயுதபாணி சுவர்ண அங்கி, ரத்தின வேலுடன் காட்சி தருகிறார்.

முகல் வீதி ஆறறை மேல் வீட்டில் அமைந்துள்ள முருகப்பெருமான் திருக் கோயில்.

பசுமந்தான் கோயில் தண்டா யுதபாணி வள்ளி தெய்வானை யுடன் சுவர்ண அங்கிகொண்டு காட்சி தருகிறார்.



மூன்று நாள் தைப்பூச விழாவினை முன்னின்று போக்குவரத்துகளைக் கவனித்து சீரோடும் சிறப்போடும் விழா நடத்தி உதவிய பர்மா இந்துத் தமிழ் மன்றத்தினர்.

அயராது தொண்டாற்றிய அன்பர்களுக்கு இரங்கூன் நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் கோயில் தரும பரிபாலன சபைச் செயலாளர் காந்தி அண்ணாமலை அவர்கள் நன்றி கூறுகிறார்கள்.



மாணவியர் பங்குபெற்ற வள்ளி திருமண
நாட்டிய நாடகத்தில் ஒரு காட்சி.

தினர், 48-வது வீதி இளைஞர் குழுவினர், நடராசர் ஆலய பொதுநலக் குழுவினர், பர்மா இந்து தமிழ் மன்றத்தினர் ஆகியோர் இரு நாட்களிலும் ஈடுபட்டிருந்தார்கள். மாலையில் ஆசிரியர் எம். காசிவிசுவநாதன் தயாரித்த வள்ளி திருமண நாட்டிய நாடகத்தைப் பக்தர்கள் பார்த்து ரசித்தார்கள். நாடகத்தில் பங்கு பெற்றோர் அனைவரும் மாணவிகளாவர் என்பது குறிப்பிடத் தக்கது.

10 உ புதன்கிழமை காலையில் பசுமந்தானிலிருந்து சுவாமி புறப்பாடு ஆரம்பமாகியது. வழி நெடுக பக்தர்கள் திருக்கண் சாத்தியும் ஊர்வலத்தோடு வந்த பொது மக்களுக்குப் பான வகைகளையும் பலகாரங்களையும் வழங்கினார்கள். இவ்வாண்டில் பசனைக் கோஷ்டிகளில் மிகுதியாகச் சிறுவர் சிறுமியர்களும் தாய்மார்களும் கலந்து கொண்டனர். கடும் வெப்பத்தையும் பொருட்படுத்தாமல் பக்திப் பாடல்களைப் பாடி வந்தது குறிப்பிடத்தக்கது. பிற்பகல் இரண்டு மணியளவில் ஸ்ரீ முருகப்பெருமான் தமது இருக்கை சேர்ந்தார். ரெங்கோன் நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் கோவில்கள் தரும பரிபாலன சபைச் செயலர் திரு. காந்தி அண்ணாமலை அவர்கள் எல்லோருக்கும் நன்றி கூற, பிரசாதம் வழங்கப் பெற்று விழா இனிதே நிறைவேறியது.

# நகரத்தார் - மாசி இதழ் பற்றி....

'நகரத்தார்' இதழ் தோன்றிய நாள் தொட்டுத் துலக்கமுற எழில்நடை போட்டு வருவது பற்றி மகிழ்ச்சியடைகிறேன். முதலாண்டில் எல்லாக் குழந்தைகளையும்போல இவ்விதழும் 'தளர்நடை' போட்டதெனினும் இன்று தமிழ் மாத முதல் நாள்தோறும் ஓடி வருகின்றது. இதன் ஆசிரியர் புலவர் நாகசண்முகம் அவர்கள் நிகரற்ற பதிப்பாளர்; புலமைமிக்க ஆசிரியர். "நகரத்தார்" அவரது அரும்பணிகள் அனைத்தும் பெற்று, முழு வளர்ச்சி பெற்றுவிடின் தனக்கு நிகரில்லாத் தமிழ் இதழாக விளங்கும் என்பது உறுதி. இது கருதியே இன்று நகரத்தாரனைவரும் "நகரத்தாருக்கு" உறுதுணை புரிந்து வருகின்றனர்.

சாதாரண மாசி இதழ்த் தலையங்கம் நகரத்தாரின் நடுவு நிலைமையை மிகமிகத் தெளிவாகப் புலப்படுத்துகிறது. அருட் கவிஞர் அரங்க சீனிவாசன் கருமாரி அம்மனைப் பற்றிப் புனைந்துள்ள பாடலின் ஓசை நயமும் கருத்துச் செறிவும் என்னை ஈர்த்தன. இன்று வாழும் மிகச் சிறந்த கவிஞர்களுள் இவரும் ஒருவராவார்.

அன்னை செட்டிநாட்டரசியாரைப் பற்றிய கருத்துரைகளைப் படித்து நெக்குருகினேன். திருவாட்டி அலமேலு சுந்தரமவர்கள் குறிப் பிட்டிருப்பதுபோல "அரசி மெய்யம்மை ஆச்சி அவர்கள் எதைத் தொட்டாலும் தொட்டது துலங்கும்". இவ் இதழின் சிறப்பு அன்னை நினைவு மலர்களால் நிறைவு பெறுகிறது.

"பழநிமலைக் காவடி" அரிய படைப்பு, செட்டிநாட்டின் இடையில் இருப்பது போன்ற நினைவை ஏற்படுத்துகிறது. ஆச்சிகள் பேச்சு— "அடடாவோ அடடா!" என்று பாராட்டத் தோன்றுகிறது. புலவர் நாகசண்முகம் அவர்கள் இன்னும் குன்றக்குடிக் காவடி, கழுகுமலைக் காவடி போன்ற பல காவடிகள் எடுக்கட்டும்! அஃதாவது இத்தகைய புதினங்களை எழுதட்டும்! அவையெல்லாம் நகரத் தாரிடையே புண்பட்டுப் புரையோடிப் போயிருக்கும் குற்றங் குறை களைச் சிரிக்கச் சிரிக்க எடுத்துச் சொல்லட்டும். ஒருவராலும் கைகூடாது என்று கைவிட்ட—பேரறிஞர் சொ. முருகப்பாவும் பின் வாங்கிக் கைவிட்ட—இந்த நகரத்தார் சமூகக் குறைபாடுகள் இவரது எழுத்தாலாவது திருந்துகிறதா, பார்ப்போம் என விழை கிறேன். சங்கப்பலகை நல்லதொரு பகுதி, தொடர்ந்து வெளி வரட்டும் என வேண்டுகிறேன். சித்தாந்த மணிமொழிச் செல்வர் திரு. சி. ராம. இராமசாமி செட்டியாரின் முதலாண்டு நினைவு விழா பற்றி, நேரிற் கண்டு வந்த ஆசிரியரின் வருணனை பாராட்டத் தக்க முறையில் அமைந்துள்ளது. புதுமைத் திருமணம் பற்றிப் படித்தேன்.

மணமகள் விவாகரத்துப் பெற்று, மனத்திற்கு இசைந்த மணாளனுடன் வாழத் துணைபுரிந்த அவரின் பெற்றோர், சுற்றத்தார் அனைவருமே போற்றுதலுக்கு உரியவர்கள்.

நகரத்தார் வளர்ச்சிக்குக் கொண்டுள்ள 'நல்லதொரு பயணம்' மேலும் மேலும் நீடிப்பதாகுக! அதனால் பல்லாயிரம் பிரதிகள் நகரத்தார் விற்பனையாகும் நிலைவரட்டும். நகரத்தார் இல்லந்தோறும் "நகரத்தார்" நுழைதல் தகும். இன்று நகரத்தாருக்கு இன ஒற்றுமை மனப்பான்மையோ, தம்மினத்தவர்பால் பற்றுதலோ பெரிதும் அமைந்திருப்பதாகக் கூறமுடியாது. வீட்டுக்கு வீடு பகைமை உணர்ச்சிதான் அதிகம்; வீட்டுக்குள்ளும் அப்படித்தான். தமிழர்களே பொதுவாக "இனப் பகைமை" பாராட்டுவர். நகரத்தாருக்கு இவ் இயல்பு இன்னும் மிகுதி. "இனத்தார் வாழப் பகலே குடிபோவர்" என்பது செட்டிநாட்டில் மிகுதியாக வழங்கும் ஒரு பழமொழி. இந்த நிலை மாறுதலடைய வேண்டுமெனில் 'நகரத்தார்' போன்ற இதழ்களால்தான் ஆகும் என்பது என் கருத்தாகும்.

'தமிழண்ணல்'
டாக்டர் இராம. பெரியகருப்பன், எம்.ஏ. பிஎச்.டி.

---



சென்னை ஐடியல் அச்சக மேலாளர் ஆத்தங்குடி அரு. பெரியண்ணன் அவர்கள் புதல்வி செல்வி பொன்னி B. Sc. (மருத்துவக் கல்லூரி மாணவி) க்கும், பொதுப்பணித்துறை இளம் பொறியாளர் பள்ளத்தூர் திரு. அரு. முத்துக்குமரன் B. Sc., B. E. க்கும் சென்ற 29-1-1971-ம் நாள் சென்னை திரு. வி. க. மணி மண்டபத்தில் திருமணம் சிறப்புற நடைபெற்றது.




## 12. வேதனைக் கதை

எங்கே ஊற்று இருக்கிறது என்று கண்டுபிடிப்பது தான் கடினம். அது தெரிந்துவிட்டால், கண் திறந்து விட்டால் நீர் பொங்கிப் பெருகுவதற்குத் தடை ஏது?

பாசம் - பரிவு - அன்பு - என்பனவற்றை யெல்லாம் காணுத வரண்ட நிலமாக இருந்த சிங்காரத்தின் உள்ளத்துப் பாசக்கண் ஐயாவின் அன்புச் சொற்களால் திறந்து கொண்டது.

“ஏ அப்பச்சி சிங்காரம் இவ்வளவு சமத்தா நீ இருந்தும் பல பேரும் பலமாதிரியா சொல்ருங்களே? ஏம்ப்பா” என்று ஐயா கேட்டது அவன் முன்னே பளிச்சிட்டது.

அவன் தன் பதினெட்டு ஆண்டு கால வாழ்க்கையை ஒருமுறை எண்ணிப் பார்த்துக் கொண்டான்.

மல்லிகைப் பூவாக இருந்தாலும் அதைப் பறித்துப் புழுதியில் எறிந்துவிட்டால் என்ன பயன்? அது மல்லிகையின் குறையாகிவிடுமா? இந்த உலகத்தில் பலபேர் எய்தவனைப் பற்றிச் சிந்திக்காது அம்பைக் குறை கூறு பவர்களாகவே இருக்கிருர்களே என்று எண்ணிய போது புனிதமான காவிரிபோலத் தொடங்கிய தன்னுடைய வாழ்க்கை இப்பொழுது கழிவுநீர் நிலையில் வந்து நிற்பதை நினைத்து அவன் கண்கள் கலங்கின.

“ஐயா! இப்ப நம்ப ஊருகள்ளே ரொம்பப் பேரு இல்லே. வேலை வெட்டி தொழில்னு பட்டணங்களுக்குப் போயிட்டாக. பத்து இருபது பேரு இருக்கவுக வெறும் வாயை மெல்றவுக. அவுகளுக்கெல்லாம் நான் அவலா ஆயிட்டேன் ஐயா! யாருவேணுமின்னுலும் என்னத்தை வேணுமினுலும் சொல்லட்டும். ஆனு சீட்டுப் போடுறதைத்தவிர வேறே ஒரு கெட்ட பழக்கம் எங்கிட்டே கிடையாது ஐயா!” உருக்கத்தோடு சிங்காரம் சொன்னுன்.

“அந்த வேலை நமக்கு என்னத்துக்கு அப்பச்சி” என்று ஐயா கேட்டார்கள்.

ஐயா! நீங்க அடிக்கடி இராமநாத அண்ணன் விட்டுக்கு வாரதுனுலே எங்க குடும்பத்தைப்பத்தி ஓரளவு தெரியும். ஆனு உங்களுக்குத் தெரியாதது எம்புட்டோ இருக்கையா!

எங்க அப்பச்சி தேவகோட்டை ஆளுக விட்டுக் கடையிலே கோலாலம்பூர்லே ஏசண்டா இருக்கா கண்ணு உங்களுக்குத் தெரியும். இந்த ஊர்லே இராமநாத அண்ணன் சிதை ஆச்சிக்கு அடுத்து புருஷன் பெண்டாட்டி கௌரவமா ஒத்துமையா பெருமையா இருந்தது எங்க ஆத்தாவும் அப்பச்சியும் தாய்யா!

சின்னவயசிலே இருந்து ஒவ்வொரு வகுப்பிலேயும் நான்தான் முதல் மார்க்கு வாங்கின்னு வந்தேன். அதைப்பத்தி நாங்க எழுதினு அப்பச்சி ரொம்ப சந்தோசப் படுவாக. நான் பத்தாவது படிக்கிறபோது எங்க ஆத்தாவுக்கு வயித்துவலி வந்து படுத்தாங்க, எந்திரிக்கலே. என்னை அன்பா ஆதரவா வளர்க்கணுங்குறதுக்காக என் சின்னத்தாளேயே இரண்டாந் தாரமாக் கட்டிக்கணுமுண்ணு அப்பச்சிகிட்டேச் சத்தியம் வாங்கிட்டு ஆத்தா செத்தாங்க. ஆனல் அப்பச்சி சத்தியத்தை நெறவேத்தினுகளே தவிர சின்னுத்தா அதைச் செய்யலே—எங்க ஆத்தா சாகிற போது புருஷனுக்கு தங்கச்சியை கட்டிவைக்கிற நிறை வோடே செத்தாங்க. ஆனு அவள் தங்கச்சியா இல்லே அசல் சக்களத்தியாள போயிட்டா.

என் சின்னத்தாளே கல்யாணம் பண்ணிகிட்ட நாலாம் மாசம் அப்பச்சி தொலேக்குப் புறப்பட்டு போயிட்டாக.

அதிலே இருந்து நான் அவகிட்டே பட்டகஷ்டம் கொஞ்சமில்லே. இருந்தாலும் பல்லேக் கடிச்சுகிட்டு படிச்சேன் பதினெண்ணும் வகுப்பிலே நம்ம மாவட்டத் திலேயே முதல் பிள்ளேயா பாஸ் பண்ணினேன். காரைக்குடி காலேஜிலே படிக்கச் சொல்லி அப்பச்சி எழுதியிருந்தாக; பணமும் அனுப்பியிருந்தாக; சேர்ந் தேன். இனி நிம்மதிதான்னு நினேச்சேன். நடக்கலே இதுக்கு இடையிலே சின்னத்தாளுக்கு பொம்பிளே பிள்ளே பிறந்துது. படிக்க வைக்கிறேன் படிக்கவைக் கிறேன்னு சம்பாறிக்கிற பணத்தையெல்லாம் ஒருத்த னுக்கே அனுப்புனு நானும் பிள்ளேயும் எக்கதியாப் போறது அப்படின்னு கடதாசி மேலே கடதாசி எழுதினு அப்படியும் அப்பச்சி பணம் அனுப்பினுக. நிலேமை மீறிப்போச்சு தாயில்லாப்பிள்ளே அவனேப் படிக்காமேக் கெடுத்துடப்புடாதுன்னு சொல்லிட்டுப் போகலாண்ணு நேராவந்தாங்க—நாலுநாள் சண்டை யிலே அப்பச்சி பாவம் பெட்டிப் பாம்பாப் போயிட் டாங்க. இனிமே அவனுக்கு பணம் அனுப்பினு கிணத் துலே விழுந்து செத்துடுவேன்னு என் சின்னத்தா போட்ட கூச்சல்லே எம்படிப்பு பாதாளத்திலே போயிடுச்சு ஐயா! என் சின்னத்தா கொட்டத்தை அடக்கமுடியாத

எங்கப்பச்சி ஊரு சிரிக்குமேண்ணு பயந்து எங்கை யாவது வேலெக்குச் சேர்த்துவிடுறேன்னு சொல்லி கிட்டே இருந்துட்டு அவுக வேலெ போயிடப்பிடா தேன்னு புறப்பட்டுப் போயிட்டாங்க.

அதுக்குப் பிறகு வேலெக்குண்ணு அங்கேஇங்கே அலெந்து பார்த்து ஒஞ்சுபோனேன். அதிலே இருந்து என் சின்னத்தா ஆயிரம் பட்டுக்கிடப்பான் சொல்லி யிருப்பா. லட்சம் குழியிலே போவான் சொல்லியிருப்பா ஐயா! எங்கே போனாலும் யாரு உதவிக்குப் போனாலும் அவுகளெத் திட்டுவா? எங்கப்பத்தா கடிசா இருந் தாலும் நல்ல மனசு. அவுக மனசையும் திட்டித்திட்டி இவதான் கெடுத்தா—மாவட்டத்திலேயே முதல் மார்க்கு வாங்கினப்போ எதிர்காலத்திலே பெரிய ஆளா ஆயிடப் போறேமுண்ணு நினெச்சேய்யா. ஆனா, ஒரு வருஷத்துக்குள்ளே சோத்துக்கே வழியில்லாத கேவலமான நிலெக்கு வந்துட்டேன். என் சின்னத்தா கையாலே போடுற ஒருவேளெச் சோத்தைச் சாப்பிடு றதைவிட விஷத்தைச் சாப்பிடலாம் இல்லாட்டா பிச்சை எடுக்கலாங்கிற நிலெ வந்துடுச்சு.''

ஐயா கண்கள் சிங்காரத்தின் சோகக் கதையைக் கேட்டுக் கலங்கின. ''ஏப்பச்சி நம்ம ராமையாவைப் பாத்திருந்தா ஏதாவது உதவி செய்திருப்பானே'' என்று கேட்டார்கள்.

அவுக உதவாமே யாருஐயா உதவுரு. இருந் தாலும் ஒருநா ஒருமுறை அவுக விட்டிலே சாப்பிட் டேன் ''நாங்க என்ன வக்கத்தவுகளா வாக்கலட்டவு களா? எப்படி எம்புள்ளெக்கு இவுக சோறுபோடுவாக— பணக் கொழுப்பா அப்படின்னு என் சின்னத்தா ராமையாண்ணனெயும் சீதை ஆச்சியையும் பத்துநாள் திட்டினு—அவுங்க என்ன பண்ணுவாங்க.''

''இதுக்கு ஒங்கப்பச்சி ஏதாவது வழி பண்ணப் படாதா?'' என்று ஐயா கேட்டார்கள்.

''ஐயா! நான் சின்னப்பிள்ளெ தெரிஞ்சு தெரி யாமேச் சொன்னாப் பொறுத்துக்கங்க. நம்ம சாதியிலே பல வீடுகள்ளே பொம்பிளெங்க ஆட்டம்தான் அதிகமாயிருக்கு. அதுக்கு ஆம்பிளெங்க இடங் கொடுக்கப்படாது. அதுக்காக அடிக்கவேணும் உதைக்க வேணுமிண்ணு சொல்லலே ஐயா! எங்க ஆத்தா இல்லெயா? எங்கப்பச்சிக்கும் ஆத்தாவுக்கும் ஒரு நாள்கூடத் தகராறு வந்ததில்லே. என் சின்னத்தா ஆ. ஊண்ணு கத்தினவுடனே எங்கப்பச்சி பயந்ததுனாலே தாய்யா நான் இப்போ சீட்டுக் கொட்டகைச் சிங்கார மாய் போயிட்டேன். எங்கப்பச்சி மனசுவைச்சு ஒரு அடி அடிச்சிருந்தா எங்க சின்னத்தா வாய்திறந்திருக்க மாட்டா—அடிக்கக்கூட வேண்டாம் — சிங்காரத்தை வளர்க்கத்தான் உன்னெக் கல்யாணம் பண்ணி கிட்டேன். அவன் வாழ்க்கையைத் தேய்க்கிறதா

இருந்தா உனக்கு இங்கே வேலையில்லேன்னு சொல்லி யிருந்தாப் போதும்—வாயை அவ மூடிகிட்டிருப்பா—பொம்பிளைக்கு இல்லாத மானம் ஆம்பிளைக்கு என்னையா வேண்டியதிருக்கு. பொம்பளைங்க லவலவண்ணு கத்துறதுக்குப் பயந்து ஆம்பிளைங்க காரியத்தை விட்டுடலாமா? எங்க அப்பச்சி விட்டுட்டாரையா?''

போக்கெடம் இல்லே, பொழுதுபோகலே. வீட்டிலே சாப்பிட வழியில்லே விளையாட்டா மூணும் வீட்டு தேனப்பனோடே சீட்டுக் கொட்டகைக்குப் போனேன். நான் கொஞ்சம் சிரிக்கச் சிரிக்கப் பேசுறதுனாலே சீட்டுப் போடவாரவுங்கள்ளாம்—பங்காளி—மச்சான்னு என்னோடே பிரியமா இருந்தாங்க—அடத்திபார்த்து இப்ப நானே ஆட ஆரம்பிச்சுட்டேன். ஒரு வருடமா படுக்க ராத்திரிக்கு வீட்டுக்கு வர்ரதுதவிர சாப்பாட்டுக்குண்ணு வர்ரதே இல்லே ஐயா! எப்படியோ எம் பொளப்பு ஓடுது.'' என்று கண்கலங்கியபடியே சிங்காரம் கூறினான்.

''அதுசரி அப்பத்தா ஏன் உன்னே அப்படிப் பேசுரு'' என்று ஐயா கேட்டார்கள்.

எல்லாம் என் சின்னத்தாமேலே இருக்கிற ஆத்திரம்—போன வருசம் அதாவது சீட்டுக் கொட்டகைப் பழக்க வர்ரதுக்கு முந்தி ஒருநா ரொம்பப் பசியா இருந்தது. அப்பத்தாளைப் பார்த்தேன். கோயிலுக்கு வந்திருந்தாங்க. அவுக வீட்டுச் சம்பட்டத்திலே இருந்து ஒரு ரூபாய் எடுத்துகிட்டுப் போய் கிளப்பிலே சாப்பிட்டேன். நான் வாரதுக்கு முந்தி கோயிலே இருந்துவந்த அப்பத்தா காசைக் காணுமுண்ணு சத்தம் போட்டுகிட்டிருந்தாங்க. நான் வந்தவுடனே விசயத்தைச் சொன்னேன். ஆனாலும் அண்ணையிலே இருந்து களவாணிப்பய பட்டந்தான். அப்படித் திட்டுனாத்தான் என் சின்னத்தா அடங்குவாண்ணு அவுக எண்ணம். ஆக மொத்தம் அவுகளுக்குள்ளே இருக்கிற அறியாமையினாலே அவுகஅவுக குடும்ப கவுரவமே ஒழிஞ்சு போயிடுதையா.

ஒருமொறை இருபத்திரண்டுநா காய்ச்சல்லே விழுந்துட்டேன். ''காய்ச்ச, கடுப்புண்ணு சொன்னாத்தான் வீட்டிலே நல்லா முழுங்கலாண்ணு கோலங் கொள்ருண்டி'' அப்படின்னு என் சின்னத்தாசொன்னா. அவமக, ஆறுவயசுதாய்யா ஆகுது, என் தங்கச்சிதான்! அந்தப் பட்டுக்கிடப்பான் அப்படித்தான் ஆத்தா......! அப்படின்னு அது சொல்லுது.

கடைசியா இராமையா அண்ணனுக்கு விசயம் தெரிஞ்சு நேரா உதவி பண்ணினா இவதிட்டுவாண்ணு கணக்கப்பிள்ளை மூலம் என்னை புதுக்கோட்டை ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவைச்சாங்க. செலவுக்காக இருதாறு ரூபாய் பணங் கொடுத்தாங்க. நான் சுகமாகி வந்தபோது, ஒருநாள் என் சின்னத்தா ஊர்லே இல்லாத நாளாப் பார்த்து அவுகளுக்கு நன்றி சொல்ற

துக்காகப் போயிருந்தேன். அப்ப சீதை ஆச்சியும் அண்ணனோடே இருந்தாக—ரூபாய் ஆச்சிக்குத் தெரிஞ்சு கொடுத்தாகளோ தெரியாமேக் கொடுத்து விட்டாகளோ அதைப்பத்தி இப்ப பேசுவமா வேண் டாமாண்ணு யோசிச்சுகிட்டிருந்தேன். ராமையா அண்ணன் என் நிலமையைப் புரிஞ்சுகிட்டாக— "சிங்காரம் நம்ம வீட்டிலே ஒளிவுமறைவு என்னப்பச்சி இருக்கு. உனக்கு டைபாயிடு ஜுரமுண்ணு தெரிஞ்ச வுடனே உன் சின்னத்தாளுக்குத் தெரியாமே நூறு ரூபாய் கொடுத்து, புதுக்கோட்டையிலே கொண்டு போய் விட்டுட்டு வாங்கண்ணு கணக்கப்பிள்ளை கிட்டே சொன்னே. அதிகமா மருந்து வாங்கவேண்டிய திருந் தாலும் இருக்கும் எரணூருக் கொடுத்தனுப்பங்கண்ணு ஆச்சிதாப்பா சொன்னு" என்று அண்ணன் கூற உடனே அப்படியே அளுதுட்டே ஐயா.

"சீதை ஆச்சி தெய்வமுண்ணு தெய்வந்தான். அவுகளுக்கு திருஷ்டிபரிகாரமாத்தான் ஆண்டவன் என் சின்னத்தாளையெல்லாம் படைச்சிருக்கான்". என்று வேதனையோடு சிங்காரம் கூறினன்.

தாய் ஒழுங்கா இல்லேன்னு வீட்டிலே பாய்கூட ஒழுங்கா இருக்காது. ஆறு வயசுப் பிள்ளை இப்படித் திட்டுதுன்னு கேக்கிறபோ ரொம்ப வருத்தமா இருக்கு. தாயைப் போல புள்ளை நூலைப்போல சேலையிங்கிறது சரியாத்தான் இருக்கு. சிங்காரம் எப்படியும் உனக்கு சீக்கிரமா ஒரு வேலை ஏற்பாடு பண்றேன். வேலை கிடைச்சாப் போவாயில்ல, என்று ஐயா கேட்டார்கள்.

"சத்தியமாப் போவேன் ஐயா" என்று சிங்காரம் உறுதியான குரலில் கூறினன்.

ஐயா அவனையும் அழைத்தார்கள். அண்ணே வீட்டுக் கார்லே வந்தா அதுக்கும் சின்னத்தா திட்டுவா நீங்க புறப்படுங்கையா" என்று அவர்களை அனுப்பி வைத்தான்.

கோயிலில் ரொம்ப நேரம் தங்கிவிட்டோமே என்ற எண்ணத்தோடு ஐயா அவர்கள் புறப்பட்டார்கள்.

## 13. வரட்டுக் கௌரவம்

ஐயா, இராமநாதன் செட்டியார் வீட்டை அடைந்தபோது, அங்கே ராமாயி ஆச்சி அவர்களுக் காகக் காத்துக்கொண்டிருந்தார்கள்.

"அண்ணே, கோயில்லே இம்புட்டு நேரம் என்ன பண்ணுணிய?" என்று பெருங்குரல் கொடுத்தபடியே ராமாயி ஆச்சி ஐயாவை வரவேற்றார்கள்.

இராமநாதன் செட்டியாரும் சீதை ஆச்சியும் என்றும் போல, எப்போதும் போல மலர்ந்த முகத் தோடு வரவேற்றார்கள். தஞ்சாவூர் போன ஐயா என்ன முடிவோடு வந்திருப்பார்கள் என்பதை அறிய வேண்டும் என்ற பரபரப்பு அவர்களுடைய வரவேற்பில் சிறிதுகூடக் காணப்படவில்லை. பொறுப்பானவர்களிடம் ஒன்றை ஒப்படைத்த பிறகு அதைப் பற்றிச் சலனப்

படுவதற்கு என்ன இருக்கிறது என்பது போலவே அவர்கள் விளங்கினுர்கள்.

நடுநாயகமாக விளங்கிய சோபாவில் அமர்ந்த படியே, ''உம் பேரனேடைதான் பேசிக்கிட்டிருந்து விட்டு வாரேன்'' என்று ஐயா சொன்னுர்கள்.

''அந்தப் பட்டுக்கிடப்பானைப் பத்திதான் என் கிட்டே பேசாதிங்கன்னு கோயில்லியே சொன்னனே, அப்புறம் ஏன் அதை இழுக்கறிய? நீங்க எதைப் பேசினுலும் தருமராஜா மாதிரி தாக்க சொல்லிக்கிண் டிருப்பிய,'' என்று ராமாயி ஆச்சி கூறினுர்கள்.

''பட்டுக்கிடப்பான், பாவி பொறப்பான்னு பட்டம் குடுக்காம பேசவே மாட்டே போலஇருக்கு. உனக்கு ரொம்ப தாராளமான மனசுதான். ஒரு ஒருத்தன் எம்புட்டோ படிச்சி பட்டம் வாங்கறதுக்குப் படாதபாடு படருன். நீ உம் பேரன் கேட்காமயே பட்டம் குடுத்துக் கிணே இருக்கியே'' என்று கூறி ஐயா கலகலவென்று சிரித்தார்கள். அந்தச் சிரிப்பில் ராமநாதன் செட்டி யாரும் சீதை ஆச்சியும் கலந்துகொண்டார்கள். அங்கே வந்து ஒரு ஓரமாக நின்ற கண்ணுயிரமும் கலந்து கொண்டான்.

''ராமாயி, உன் பேரன் கதையெல்லாம் கேட் டேன். எனக்கே அழமாட்டாத குறையா போச்சு. அவன் சின்னத்தாதான் திட்டரு, அதுக்காக நீயும் அவனைத் திட்டனுமா? கோயில்லே நாலு பேரை வச்சுக்கிட்டு அவனைக் களவாணிப் பயன்னு சொன்னே, அவனுக்கு ஆத்தா செத்துப்போரு. ஆத்தாளா வந்தவ கஞ்சிகூட ஊத்த மாட்டேங்கரு. புள்ளைக்குப் பசிச்சிருக்கு. உம்முட்டுச் சம்பட்டத்தி லிருந்து ஒரு ரூபா எடுத்திருக்கான். நீ பாத்துட்டே, அவனும் வந்து சொல்லிட்டான். இது பெரிய கள வாணித் தனமா? ரெண்டு வருஷமா விடாம இதை ஊரெல்லாம் சொல்றயாம். பேரன் களவாண்டுட் டான்னு சொல்றதிலே உனக்கு என்ன பெருமை! சிங்காரத்தைத் திட்டுறதான் உன் மூத்த மருமக உன்னைத் திட்டாம இருப்பாங்கிறதுக்காக அவனைத் திட்டறதா? அதுக்காக அவ உன்னை மெச்சிறப் போருளா? அவ புருஷன் தான் பயந்து புள்ளை படிப் புக்குப் பணம் குடுக்காம ஓடிப் போயிட்டான். உங் கிட்டே என்ன பணமா இல்லே? மாசம் நூறு ரூபா குடுத்து நீ அவனைப் படிக்க வச்சிருக்கப்படாதா? உங்க செட்டியார் இருக்கிற காலத்திலே நகரக் கோயில் சாமிக்கும் அம்மனுக்கும் நீதான் வெள்ளி அங்கி பண்ணி வச்சே. அதைச் சாத்தற விசேடத்துக்கு நான் வந்திருந்தேன் நல்லா ஞாபகம் இருக்கு. அது நல்ல புண்ணியமாத்தான் பண்ணினே. பேரனைப் படிக்க வைக்கிறதும் புண்ணியம்தானே? நீ நல்லா விவரம் தெரிஞ்சவ, அதைச் செஞ்சிருக்கப்படாதா?'' என்று ஐயா மிகுந்த உருக்கத்தோடு கேட்டார்கள்.

"அவனைப் படிக்க வச்சிருந்தா அவன் சின்னத் தாளா வந்திருக்காளே சீறழிஞ்சவ, அவ என்னைப் பறக்கடிச்சிருப்பா."

"என்ன பண்ணுவா?" என்று ஐயா கேட்டார்.

"வீட்டிலே உலைகூட வைக்கவிடாம அடிச் சிருப்பா," என்று ராமாயி ஆச்சி கூறினார்கள்.

"இதெல்லாம் சரியில்லை ராமாயி. அவளும் பொம்பளைதானே. அப்படியே அவ எதாவது செய் வான்னு நினைச்சாலும் காரைக்குடியிலே ஒரு சின்ன வீடு எடுத்துக்கிட்டு பேரனைப் படிக்க வச்சுக்கிட்டு காலையிலே சாயந்திரம் கொப்புடையம்மனைக் கும்புட்டுக் கிட்டு நிம்மதியா இருந்திருக்கலாம். நீ ஒவ்வொருத் தருக்கா இங்கே பட்டங் குடுத்துக்கிண்டிருக்கிற அவசியம் இருந்திருக்காது. உம் பேரன் ஒழுங்கா பட்டம் வாங்கியிருப்பான். நடந்தது நடந்து போச்சு, இனிமேயாவது சிங்காரத்தைத் திட்டறதை விட்டுத் தொலை. நான் எப்படியும் சீக்கிரம் அவனுக்கு ஒரு வேலை பாத்து வாங்கிக் குடுத்துடறேன்," என்று ஐயா கூறினார்கள்.

பேரன் மீது வைத்திருந்த பாசத்திற்குப் போட்ட திரை ஐயாவின் சுடர்போன்ற சொற்களால் நீங்கி விடவே, ராமாயி ஆச்சியின் உள்ளத்தில் உணர்ச்சிகள் பொங்கின. தம் கண்களில் வழிந்த நீரைத் தம் சேலைத் தலைப்பால் அவர்கள் துடைத்துக்கொண்டார்கள். சிறிது நேரம் அங்கே அமைதி நிலவியது.

சீதை சம்பந்தியா கோதை, தாக்க சொல்லிவிட் டிருக்கா. வெங்கல அடுக்கு பதினெண்ணு கண்டிப்பா வைக்கணுமாம். பத்தாயிரம் ரூபாய்க்குக் குறையாம எவர்சில்வர் சாமான் வைக்கணுமாம். இரும்பு பீரோ வைக்கிறதா பேசியிருக்காம். அதோட ஒரு கண்ணாடி பீரோவும் வைச்சாதான் நல்லா இருக்குமாம்," என்று ராமாயி ஆச்சி அடிக்கிக்கொண்டே போனார்கள்.

"இல்லாட்டி நல்லா இருக்காதாமா? ஒருநாக் கூத்துக்கு மீசை செரைக்கிறதாண்ணு பழமொழி சொல்லுவாக. அது மறுபடி வளரும். நாம் ஒரு கல்யாணத்திலே வர்ர பெருமையைப் பெரிசா நினைச்சு பண்ற கோளாறுக தலைமுறைக்கே இடியாப் போயிடுது. ராமையாவுக்கு ஒரு பொண்ணு, சாமான் சட்டெல்லாம் நல்லாவைப்பாக. அதை வைக்கவேணும் இதை வைக்கவேணுமுண்ணு அப்பறம் பேசப்படாதுன்னு நான் முன்னாலேயே கோதை கிட்டேச் சொல்லியிருக் கேன்—அப்பறம் இப்ப ஏன் சொல்லிவிடுரு" என்று ஐயா சற்று காரமாகவே கேட்டார்கள்.

"அதெல்லாம் எனக்குத் தெரியாதண்ணே— சந்தையிலே என்னைக் கண்டா. உம் மாமனுரு மகட்டே சொல்லிருண்ணு சொன்னா."

“நீ சொல்றது தப்புண்ணு சொல்லலே ராமாயி, நடப்பைச் சொல்றேன். எரியிற விட்டிலே புடுங்கினது மிச்சமுங்கிற மாதிரி மாப்பிள்ளே விட்டாருகள்ளே பல பேரு நடத்துக்கிருக—அடுத்த விட்டிலே எரியுறது நாளைக்கு நம்ம விட்டிலேயும் பிடிக்குமில்லே, அதை யோசிக்க வேண்டாமா?” என்று ஐயா கேட்டார்கள்.

“அதெல்லாம் நாயந்தாண்ணே! இதுகள்ளாம் வைச்சா பெருமையா இருக்குமுண்ணு சொன்னு.” என்று ராமாயி ஆச்சி கூறினுர்கள்.

இதைக் கேட்டதும் ஐயா சிரித்தார்கள்.

ஏண்ணே சிரிக்கிரிய.

ராமாயி நாலு மாசத்துக்கு முந்தி கோதை தம் பொண்ணுக்கு எங்க ஊர்லே எங்க பங்காளி விட்டிலே தான் கல்யாணம் பண்ணிரு. எத்தனே அடுக்கு வைச்சா தெரியுமா? ஏழு அடுக்குத்தான் வைச்சா? அவ பதினெண்ணு வைச்சிருந்தா இன்னும் பெரு மையா இருக்காதா? வசதி உள்ள விடுதான் இருந் தாலும் பழைய பீரோவை சரி பண்ணி பாலீசைப் போட்டு வைச்சா? இப்போ காட்ரசு அலமாரியோடே கண்ணுடி பீரோ வேணுங்கிரு? அடுத்தவுக நல்லா இருந்தாத்தான் கண்ணுக்கு அழகு. ஏதோ வாய்க்கு வந்ததைச் சொல்லிவிட வேண்டியது. பாவம் பல பேரு நல்லாத் தொழில் பண்ணிக்கினு இருக்கிற ஆளுகள்ளாம் ஒரு கல்யாணத்திலே உக்காந்து போருக—முந்திப் பர்மா மலாயாண்ணு போனேம். பணம் தண்ணியா வந்தது. தண்ணியைக் கொட்டுற மாதிரி கல்யாணத்திலே இருந்து காப்புக்கட்டுப் புதுமை வரையிலே கொட்டுணம். நெடுகமுடியுமா? ராமாயி, பணம் சம்பாதிக்கிறதுங்கிறது கேணியிலே தண்ணி யிரைக்கிறமாதிரி—சில பேருக்கு மழை பெய்யுறமாதிரி வரலாம். எல்லாரும் அப்படி நினேச்சுடப்படாது. இரைச்ச தண்ணியை எண்ணித்தான் செலவழிக்க ணும்—போகட்டும் கோதையைப் பாத்து நான் சொல்லிக்கிறேன்” என்று ஐயா கூறினுர்கள்.

“மகராசன் பேச்சு எப்பவும் மழை பெஞ்சமாதி தான்” என்று கூறிய ராமாயி ஆச்சி எல்லாரிடமும் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார்கள்.

ஐயா தஞ்சாவூர் போய்வந்த செய்தி பற்றி இராம நாதன் செட்டியாரிடமும் - சீதை ஆச்சியிடமும் சுருக்க மாகச் சொன்னுர்கள்.

அதுவரை அவர்கள் கலகலப்பாகப் பேசிக் கொண் டிருந்தார்கள் என்ருலும் இதைக் கூறத் தொடங் கியதும் இதுபற்றி அவர்கள் என்ன நினைப்பார்களோ என்ற எண்ணமும் மங்கை மிகவும் கேவலமாகப் பேசி விட்டாளே என்ற வேதனையும் சேர்ந்து அவர்கள் குரலே கம்மச் செய்தன.

மங்கை ஆச்சி ஐயாவை மிகவும் வேதனைக்கு ஆளாக்கிவிட்டார்கள் என்ற விவரங்களை உணர்ச்சி வசப்பட்டவனுகக் கண்ணுயிரம் கூறினுன்.

சீதை ஆச்சியும் ராமனுதன் செட்டியாரும் எல்லா வற்றையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டிருந் தார்கள். அதுபற்றி அவர்கள் என்ன சொல்லப் போகிருர்களோ என்று ஐயாவும் கண்ணுயிரமும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

(தொடரும்)

# சிந்தியுங்கள்! செயலாற்றுங்கள்!

## ஒன்று பட்டால் உண்டு வாழ்வு

இக்கருத்தினை விளக்கும் கதைகள் பல உண்டு. ஆனால் ஒற்றுமையால் உயர்ந்த சமூகத்தின் கதை உங்களுக்குத் தெரியுமா? என். எஸ். எஸ். என்ற மூன்றெழுத்தைத்தெரியாதார் கேரளத்தில் இல்லை. அது குறிப்பது நாயர் சேவைச் சங்கம் (Nair Services Society) 1914—ஆம் ஆண்டு காந்திய சர்வோதயத் தொண்டர் கேளப்பன் அவர்களைத் தலைவராகவும், மன்னத் பத்மநாபனைச் செயலாளராகவும் கொண்டு, நாயர் சமூகத்தை ஒன்று படுத்தி உயர்த்தத் தோன்றியது இச்சங்கம்.

இன்று கேரளமெங்கிலும் 3000 இணைச் சங்கங்களையும், 25,000 ஊதியமற்ற பொது நிலை ஊழியர்களையும் கொண்டு பீடுநடை போடுகிறது. பத்துலட்ச ரூபாய்கள் மாத ஊதியமாக வழங்கப்படுகிறது. பொன்னாகவும், பொருளாகவும், நன்கொடையாகவும் வழங்கப் பட்டு வளர்ச்சி பெற்ற இச்சங்கத்தின் இன்றைய ஆஸ்தி ரூ. 15 கோடிக்கு மேலாகும்.

இதன் நிர்வாகம் கிளைச்சங்க உறுப்பினர்கள் கொண்ட பிரதிநிதித்துவ சபையின் மூலம் தேர்ந்தெடுக்சப் பட்ட 21 இயக்குனர்கள் கொண்ட மன்றத்திடம் உள்ளது. ஐந்துபேர் கொண்ட மன்றத்தின் உள்சபை நிர்வாக விதிமுறைகளை வகுக்கிறது. ஆண்டுதோறும் செங்கணச்சேரியிலுள்ள தலைமை அலுவலகத்தில் பிரதிநிதித்துவ சபை கூடி பலகோடி ரூபாய்களுக்கான வரவு, செலவுத்திட்டத்தை அங்கிகாரம் செய்கின்றது.

இச் சங்கத்தின் கல்விப்பிரிவு 93 பள்ளிகளையும் 18 கல்லூரிகளையும் (பட்டப் பிற்காலப் படிப்பு வசதிகளுடையது) நிர்வகித்து வருகின்றது. பற் பல சமூகத்தைச் சேர்ந்த சுமார் 70,000 மாணவ மாணவிகள் பயில்கின்றனர்.

கூட்டுறவு முறையில் அங்காடிகள், விவசாயப் பண்ணைகள், வீடு கட்டுதல், வட்டித் தொழில் (Banking) சங்கங்கள் அமைத்து மக்களுக்குத் தொண்டாற்றி வருகின்றது. நவீன வசதிகள் மிக்க மருத்துவ மனைகளையும் நடத்தி வருகின்றது. அம்மக்களின் தேவைகள் அனைத்தையும், கண்காணித்து நிறைவேற்றி வருகிறது இச் சங்கம்.

முயன்றால் முடியாததுண்டோ? மனம் இருந்தால் மார்க்கமுண்டு. ஏன் நாமும் இம்முறையினைப் பின்பற்றக் கூடாது?

# செல்வம் என்றால் என்ன?

ஏ. எல். அருணசலம்



செல்வம் என்பது என்ன? பணம்தான் செல்வமென்று நம்மிடையே பலர் நினைக்கின்றனர். ஆனால்.....உண்மையில் செல்வம் என்ற சொல் பணத்தைக் குறிப்பிடுவதோடு மட்டுமல்லாமல் ஒரு நாட்டின் மக்கள் தொகை நீர் வளம், நிலவளம், கனிவளம், கச்சாப் பொருள் வளம், தொழில் வளம், என்பன போன்ற பல வகைப்பட்ட பொருள்களையும் குறிப்பதாகும். தற்காலப் பொருளாதாரம் பணப் பொருளாதாரம். ஆகையால் பணம் நிறையப் படைத்த ஒருவன் மற்ற எல்லாச் செல்வங்களையும் மிக எளிதான முறையில் கைக்கொண்டு விடுகிறான். ஆகவேதான் நம்மிடையே அநேகர் பணத்தைப் பெற்று விட்டால் எல்லாவற்றையும் பெற்றுவிடலாமென்றும், தற்கால அரசு தன் வருவாயைச் சரியான முறையில் பகிர்ந்து கொடுக்காததால் சமுதாயத்தில் பொருளாதார நிலையில் ஏற்றத் தாழ்வுகள் இருக்கின்றன என்றும், அவ்வித ஏற்றத் தாழ்வுகளை அரசு நீக்கவேண்டுமென்றால் குறைந்த ஊதியம் பெறுகிறவர்களுக்கு நிறைய ஊதியம் கொடுக்க வேண்டும் என்றும், ஏழைகள் மீது விதிக்கும் வரியை நீக்க வேண்மென்றும், பணக்காரர்கள் கொடுக்கும் வரியை உயர்த்த வேண்டுமென்றும் கூறுகின்றனர். இப்படி செய்வதனால் பணம் சமூகத்தில் எல்லோருக்கும் சமமாகப் பகிர்ந்து அளிக்கப்படுகிறது. பணத்தால் ஒவ்வொருவரும் தனக்குத்தேவையான மற்ற செல்வங்களை அடையமுடிகிறது. அப்படி அடைய உள்நாட்டுச் செலாவணி மிக அவசியமாகிறது.

உள்நாட்டுச் செலாவணி:— இது பொதுவாக உள்நாட்டு நாணயத்தைக் குறிக்கிறது. அத்தோடு மத்திய மாநில அரசுகள் வெளியிடும் கடன் பத்திரங்கள் தேசியப் பாதுகாப்பு பத்திரங்கள், சிறு சேமிப்பு பத்திரங்கள் முதலியவற்றை குறிப்பிடுவதோடு மட்டும் அல்லாமல் வரையறுக்கப்பட்ட கம்பெனிகள், பங்கு பத்திரங்களையும் குறிக்கும், மேலும் உள்நாட்டுச் செலாவணி வங்கிகளின் செக்குகள் பில் ஆப் எக்சேஞ்சுகள் முதலியவற்றையும் குறிக்கும்.

மேற்கண்டவைகள் அதிகரிக்கும் போது பணப்புழக்கம் அதிகரிக்கிறது. பணத்தின் மதிப்பு குறைகிறது. விலை உயர்கிறது. விலை உயர்வதால் உற்பத்தியாளர்கள் பொருள்களை உற்பத்தி செய்து அதிக விலைக்கு விற்று நிறைய லாபம் சம்பாதிக்கின்றனர். பணத்தின் அளவும் கடன்பத்திரங்களின் அளவும் குறையும் போது இதற்கு மாறாக நடைபெறுகிறது.

ரிசர்வ் பேங்க்:—இதன் நோக்கம்.

1. அரசாங்க வங்கி
2. மற்ற எல்லா வங்கிகளின் செயல்களைக் கட்டுப்படுத்தும் தலைமை வங்கி.
3. உள்நாட்டுச் செலாவணியை ஒருசீராக அமைத்துத்தருவது.
4. பணம் காகித நோட்டுக்கள் முதலியவற்றை அச்சடித்து வெளியிடுதல்

நம் நாட்டிலே காகித நோட்டுகள் கண்டபடி அச்சிடப்படுவதாக பலர் குறை கூறுகிறார்கள். அப்படிச் சொல்வது சரியில்லை. நோட்டுக்கள் அச்சிடுவதற்கு நம் நாட்டிலே 'மினிமம் ரிசர்வ்' முறை அதாவது குறைந்தபட்சம் ஒதுக்கீட்டுத் தொகை முறை கையாளப்படுகிறது. 200கோடிரூபாய்ஒதுக்கீட்டுத் தொகையாகநிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதில் 115 கோடி ரூபாய் மதிப்புக்கு தங்கமாகவும் மீதி அன்னிய நாட்டு நாணயமாற்றாகவும் இருக்கவேண்டும். அதற்குமேல் மத்திய வங்கி, பொருள்களின்உற்பத்தி அளவுக்குத் தக்கவாறு பாங்குநோட்டுக்கள் அச்சடிக்கப்படுகிறது. ரிசர்வ் பாங்கு உள்நாட்டுச் செலாவணியை எப்படிக் கட்டுப்படுத்துகிறது என்றால் (1) 'குவான்டிடேடிவ் கிரடிட் கண்ட்ரோல் பாலிசி' (பண அளவு கட்டுப்படுத்தும் முறை) (2), குவாலிடேடிவ் கிரடிட் கண்ட்ரோல் பாலிசி' (அதாவது பணத்தைப் பயன் படுத்தும் தன்மைகளை கூறும் முறை) என்ற இரண்டு விதமான செயல்களால் உள்நாட்டு வாணிபத்தைக் கட்டுப்படுத்துகிறது. முந்தியதில் மற்ற வங்கிகளின் பணஇருப்பைக் கட்டுப்படுத்துதல் வட்டிவிகிதத்தை நிர்ணயித்தல், சந்தைகளில் பாதுகாப்பு பத்திரங்கள் விற்றல், வாங்கல் முறைகள் முதலியவற்றைப் பயன்படுத்தி உள்நாட்டுச் செலாவணியை கட்டுப்படுத்துகிறது. கேஷ் ரிசர்வ் ஆப் தி கமர்சியல் பேங்க்ஸ்' 'பேங்க் ரேட் ஒப்பன் மார்க்கட் ஆபரேஷன்' என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். பிந்தியத்தில் மத்திய வங்கியானது யாருக்கு எந்த நேரத்தில் எப்படிப்பட்ட கடன் கொடுக்கப்படுகிறது, அந்தக் கடன் உற்பத்திக்காகப் பயன்படுத்தப்படுகிறதா? இல்லை வீண் செலவு செய்யப்படுகிறதா? மேலும் ஒரே பகுதி மக்களுக்குத்தான் இந்த வித கடன் உதவி செய்யப்படுகிறதா? என்று எல்லாம் ஆராய்ந்து செயல் புரிகிறது.

எல்லோருக்கும் கடன் கிடைக்கவேண்டும் உற்பத்தி பெருக வேண்டும் என்ற ஒரே நோக்குடன்தான் நமது அரசாங்கம் பாங்குகளை தேசியமயமாக்கி இருக்கிறது.

உள்நாட்டுச் செலாவணியைப் பெருக்க உற்பத்தியைப் பெருக்க வேண்டும்.

சின்னச் சின்னக்கதை! சிங்காரக்கதை!
சொல்லியவர் மிகப்பெரியவர்! யாரவர்?
21-ம் பக்கம் பாருங்கள்!

ஜனநாயக நாடு முன்னேற சிறந்த திட்டங்கள் தேவைத் திட்டங்களைத் தீட்டுவது எளிது. அப்படித் தீட்டப்பட்ட திட்டங்களைப் பகுத்தறிவின் துணைகொண்டுகட்டுப்பாட்டுடன்செயல்படுத்தவேண்டும் பகுத்தறிவோடு விஞ்ஞான அடிப்படையில் சிந்தித்து நாட்டிற்குத் தேவையான அபிவிருத்தித் திட்டங்களைத் தீட்டி, நேர்மையான வழியில், கட்டுப்பாட்டுடன் செயலாற்றினால்தான் நாம் எதிர்பார்க்கும்உற்பத்தித் திறன் பெருகும். நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் உற்பத்தி பெருகுமாயின் அனைவருடைய வாழ்க்கையிலும் நிலை தானாகவே உயர்வது எளிதாகும். எல்லோருடைய வாழ்க்கைத் தரமும் உயர வேண்டுமென்பதில் அனைவருக்கும் ஒருமித்த கருத்து இருப்பதில் வியப்பில்லை. ஆனால்...... அந்த நிலையை அடைவது எப்படி?

அனைவரும் உழைத்தால் மட்டும் போதுமா? உழைப்பது திறமையோடு இருத்தல் வேண்டும். அதிலும் செய்கின்ற காரியத்தில் ஒவ்வொருவருக்கும் ஊக்கம் வேண்டும். ஊக்கத்துடனும் உற்சாகத்துடனும் செய்கின்ற செயல்களை ஒழுங்கு படவும் குறிப்பிட்ட நேரப்படியும் செய்திடவேண்டும். அவற்றைச் சிக்கனத்துடனும் சிறந்த நேர்மையுடனும் செய்திடவேண்டும். இப்படிப்பட்ட நிலைமை மாற்றம் ஏற்பட்டால்தான் நாம் அனைவரும் எதிர்பார்க்கும் நிலையினை அடைந்திடமுடியும். முன்னேற்ற மடைந்துள்ள மேற்கு நாடுகளாலும்கிழக்குப் பகுதி நாடுகளாலும் இந்த மாற்றங்களை, சீர்திருத்தங்களை ஒப்புக்கொண்ட அல்லது நடைமுறையில் கையாளுகின்ற நாடுகளாகப் பார்க்கலாம். ஒருநாடு சிறக்க வேண்டுமானால் அது எப்படிப் பட்டதாக இருக்கவேண்டும், என்று கூற வந்த வள்ளுவர்,

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு"

என்றார்.

இயற்கை வளமும் தக்க துணிவாளர்களும் குறையாத செல்வம் உடையோரும் சேர்ந்தால்தான் நாடு சிறக்கும் என்ற உண்மையை வள்ளுவர் எடுத்துச் சொல்லியுள்ளார். நமது நாட்டின் இயற்கை வளம் ஏராளமாக உள்ளது. தொழில் துணிவு மேலும் பெருகினால் நாடு இன்னமும் சிறக்கும் என்பதில் சந்தேகமில்லை. நமது நாடு உலக நாடுகளுடன் ஒப்பிடும்போது முன்னேறாத நாடுகளின் பட்டியலில் தான் இடம் பெற்றுள்ளது. அந்நிலை மாற்றப்படவேண்டும். மற்ற நாடுகளின் சராசரி வருமானத்துடன் நம்முடைய நாட்டின் சராசரி வருமானத்தையும் ஒப்பிடும்போது நமக்குச் சங்கடமாகத்தான் உள்ளது. உதாரணத்திற்குப் பார்ப்போமானால் அமெரிக்காவில்.

| | | | |
|---|---|---|---|
| சராசரி வருமானம் | ...... | 1870 | டாலர் |
| கனடா | ...... | 1210 | டாலர் |
| பிரிட்டன் | ...... | 780 | டாலர் |
| பெல்ஜியம் | ...... | 800 | டாலர் |

இவையனைத்தும் உலக நாடுகளில் முதல்தரமான நாடுகள். பொருளாதாரத்தில் வலிவு மிகுந்த நாடுகள். உலகத்தில் பொருளாதார ரீதிப்படி ஏழை நாடு என்று சொல்லத்தகுந்த நாடுகளின் பட்டியலில்தான் நமது நாட்டையும் இணைக்கவேண்டியுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| தாய்லாந்து | ...... | 80 | டாலர் |
| கொரியா | ...... | 70 | டாலர் |
| பாகிஸ்தான் | ...... | 70 | டாலர் |
| இந்தியா | ...... | 60 | டாலர் |
| பர்மா | ...... | 50 | டாலர் |

நமக்குக் கீழேயுள்ள நாடு பர்மா ஒன்றுதான்.

பாங்குகள் உள்நாட்டுச் செலாவணிப் பெருக்கத்திற்கு முக்கிய பங்கு ஏற்கின்றன. பலரது பணத்தை டெபாசிட்டாகப் பெற்றுப் பலருக்குக் கடன்கொடுப்பது பாங்குகளது முக்கிய அலுவலாகும். பாங்குகள் கடனுக கொடுப்பது. அதில் பங்கு போட்டவர்களின் பணமல்ல, சர்க்காரின் பணமும் அல்ல, டெபாசிட் போட்டவர்களின் பணம். பாங்கின் மூல தனம் பத்துக் கோடி என்ருல் அது கடனுக அனைவரிடமும் வினியோகித்துள்ள பணம் 500 கோடி கூட இருக்கும். இந்த 500 கோடியும் டெபாசிட்டார்களுடைய பணம். இந்தப்பணம் முழுவதையும் கடனுகக் கொடுத்துவிட முடியாது. பாங்கின் நடவடிக்கைகள் இரண்டு முக்கிய கொள்கைகளின் அடிப்படையில் நடைபெறும்.

எந்தத் தொழிலும் சொந்த மூலதனத்தைக் கொண்டு மட்டுமே நடந்துவிடாது. இயந்திரங்கள் கட்டிடங்கள் முதலியவற்றிற்கும், ஆரம்பகாலத்தில் பொருள் உற்பத்திக்கு வேண்டிய கச்சாப்பொருள் முதலியவற்றிற்கு ஒரு பகுதிக்குத்தான் மூலதனம் இருக்க முடியும் பல தொழில்கள் நெடுங்கால கடனை எதிர்பார்த்தே தொடங்கப்படுகிறது. அன்ருடம் தொழில் நடத்துவதற்கு பாங்கு வசதி அவசியம். கிராம மக்களும் இதன் அவசியத்தை உணர்ந்தால்தான் உள்நாட்டுச் செலாவணி நிலை சீர்படும்.

வங்கிகள் தேசியமயமாக்கப்பட்ட பிறகு சிறு வியாபாரிகள் கைவினைப் பொருள்களைச் செய்வோர், தேனீர் விடுதிக்காரார்கள், காய்கறி விற்பனையாளர் விவசாயிகள் முதலியோருக்குப் பெருமளவு உதவிகள் அளிக்கப்படுகின்றன.

வங்கிகள் என்ருலே பெரும் பணம் போடவும் எடுக்கவும் வசதியுள்ளவர்கள்தான் செல்லமுடியுமென்ற நிலைமாறி அனைவரும் இன்று வங்கிகளைத் தங்களதுசொந்தஇடமாகப் பாவிக்கத் தொடங்கியுள்ளனர். அதிக வட்டியை அளித்து தொகை பெற்று வந்த நிலைமாறி இன்று தாங்கள் ஈட்டும்பொருளில் சிறிது சேமிக்கவும் முடியும் என்ற நிலை வளர்ந்துள்ளது. வங்கிகளது தொடர்பால் பலரும் சேமிப்புக் கொள்கையை அறிந்து போற்றி வருகின்றனர். இது நாட்டில் ஏற்பட்டுள்ள வரவேற்கத் தக்க ஒரு நல்ல மாறுதல் ஆகும்.

விவசாயிகளும் தற்போது வங்கிகளைப் பயன்படுத்திக் கொள்ள முன்வந்துள்ளனர். விதைக்கும் உரத்திற்கும் நீர் இறைக்கும் பம்பு செட்டிற்கும் கிணறு வெட்டுவதற்கும் நிலத்தை சீர்திருத்தம் செய்வதற்கும் தேவையான கடன்களை தற்போது வங்கிகள் வழங்கி வருகின்றன.

நமது நாடு, விவசாய நாடு, என்று பெயர் பெற்றிருந்தாலும் ஜப்பான் நாட்டில் விளையும் அளவுக்கு இங்கு விளைச்சல் இல்லை. நமது நாட்டைப் போல் நான்கு மடங்கு நெல் ஏக்கரா ஒன்றுக்கு ஜாப்பானில் உற்பத்தியாகிறது. நாமும் அதே போல் முன்னேற முடியும். திறமையோடு விஞ்ஞானக் கருவிகளின் துணையோடு நேர்மையாக உழைப்பை நல்குவோமானுல் நாமும் முன்னேற முடியும். முன்னேற்

சிங்காரக் கதையைச் சொல்லியவர்
சரித்திரக் கதை மன்னர் சாண்டில்யன் அவர்கள்
கதை 27-ஆம் பக்கத்தில் இடம்பெற்றுள்ளது.

றத்துக்கான அறிகுறிகள் தற்போது தென்படுகின்றன. முன்பெல்லாம் பணத்தைப் பூட்டி வைப்பார்கள். அல்லது தங்கமாக மாற்றி வைப்பார்கள். இந்தப் பழைய பழக்கங்கள் மாறிப் பாங்கில் பணம் போடுவது கணக்கு வைத்துக் கொள்வது வங்கி மூலம் வசூல் பட்டுவாடா பேரங்கள் நடத்துவது என்ற பழக்கங்கள் ஆரம்பித்துள்ளன.

தற்போது கிராமங்களில் விவசாயத்திற்கான கடன் வசதிகளைப் பெருக்க எண்ணுகிறோம். கடன் வசதி பெருகுவதற்குத் தக்கபடி உற்பத்தி பெருக வில்லையானால் விலைவாசி உயரும். உற்பத்திப் பெருக்கத்திற்குச் சம்பந்தமில்லாமல் கடன் வழங்கப்படுமானால் அது உள்நாட்டுச் செலாவணி வீக்கத்தில் கொண்டு விட்டு விடும். ஆகையால் வங்கிகள் ஏற்படுத்தும் கடன் வசதிக்குத் தக்கபடி வங்கிகளுக்கு கிடைக்கக் கூடிய டெபாசிட் அதிகரிக்க வேண்டும். கொடுக்கிற கடன் உற்பத்தி வேலைக்குப் பயன்படுகிறதா என்பதில் கண்காணிப்பு வேண்டும். இவை இரண்டும் சரிவர நடைபெறாமல் போனால் பண வீக்கமும் விலைவாசிகள் ஏறுவதும் தவிர்க்க முடியாதவைகளாக ஆகிவிடும்.

எப்படி மனிதனுடைய உடலில் ரத்தமானது தடையில்லாமல் ஓடினால்தான் அவன் ஆரோக்கியமாக இருப்பானோ அதுபோன்றே ஒரு நாட்டின் உள்நாட்டு செலாவணி சிலரது கையிலே குவியாமல் பலரிடமும் பகிர்ந்து அளிக்கப்பட்டுச் சுழன்று கொண்டிருந்தால்தான் நாட்டில் நல்ல எதிர்காலம் உருவாகும்.




நகரத்தார்கள் என்ற சிறப்புப் பெயருடன் பண்பாட்டின் நிலைக் களனாகத் திகழும் நம் இனம் பல பெருமைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. சைவமும், தமிழும் தழைத் தினிதோங்கத் தளராது இன்றளவும் பாடுபட்டு வருகிறோம். கல்விப்பணிகளும்; மற்ற அறப்பணிகளும் நம் பெருமையை பாரறியச் செய்துள்ளன. இந்திய சுதந்தர காலத்திலும், விடுதலைக் குப் பின்னர் நம் நாட்டின் வர்த்தக, பொருளாதார வளர்ச்சியிலும் நம் பங்கு மகத்தானது என்பதை யாராலும் மறுக்கவோ, மறைக்கவோ முடியாது. இத்தகைய நம் சமூகத்தில் மாபெரும் சமூகநோய் ஒன்று தொத்து நோயாகப் பரவி தேசியத் தீங்காக வளர்ந்து வருகிறது. அத்தகைய நோய் வரதட்சணை என்று அழைக்கப்படும் சீதன நோயாகும். இந்த நோய் தான் இன்று மெள்ள மெள்ள ஆனால் நல்ல அடித்தளத்தோடு நஞ்சாக நம்மிடையே பரவிவருகிறது.

— சோமு —

"காலம் மாறக் கூடியது, மாறிக் கொண்டுதான் இருக்கும், காலத்திற்கேற்ப, கருத்தில் மாற்றம் வேண்டும் மாறாத சமுதாயம் மறைந்து விடும்" என்ற பொன்மொழியை மாமருந்தாய் உங்கள் முன் படைத்து இக்கட்டுரையைத் தொடர்கிறேன்.

இந்த வரதட்சணைப் பிரச்சினை இன்று நேற்றல்ல ஏறத்தாழ ஐம்

பது ஆண்டுகளுக்கு மேலாக நம் மிடையே நிலவி வருகிறது. பழங் காலத்தில் நம் 'சமூகத்தில் பெண் கள் குறைவாக இருந்தார்கள். ஆதலால் பெண்ணைப் பெற்ருேர் இச்சந்தர்ப்பத்தை வர்த்தக மாற் றிப் பொருளாக பல்லாயிரக் கணக் கானரூபாய்களை வாங்கிக்கொண்டு திருமணம் செய்வித்தனர். நம் சமூகத்தின் தனித் தன்மையைக் காக்க விரும்பிய பெரியவர்கள் செல்வ வசதி பெற்றிருந்த கார ணத்தால் இதை கௌரவப் பிரச் னையாகக் கருதி அவர்கள் விருப் பம் போல பொருள் கொடுத்துத் திருமணத்தை நடத்தி வைத் தார்கள். அந்தக் காலத்தில் இந் நிகழ்ச்சி பெண்களை வர்த்தகப் பொருளாக்கி விட்டது மிக வருத் தத்திற்குரியது. காலம் உருண் டோடியது. கடமைகளும் அதி கரித்தன. பொருளாதார வசதி குறைய ஆரம்பித்தது. நம் சமூகத்தில் பெண்களின் எண் ணிக்கையும் அதிகரித்தது. ஆண்களின் எண்ணிக்கை அவ் வளர்ச்சியோடு ஈடு கட்ட முடி யாத நிலை உருவாயிற்று. ஆண் கள் வர்த்தகப் பொருளாக்கப் பட்டு விட்டனர். வர்த்தகப் பொருள் மாறினும் வர்த்தக நோக்கம் மாருது இன்றளவும் நீடித்து வரு கிறது. இதன் பலனுக பல பெண் களைத் திருமணவயதில் வைத்துக் கொண்டு ஏழைத் தாய் தந்தை யர்கள் இன்றளவும் இரத்தக் கண் ணீர் வடிக்கின்றனர்.

நம் வாழ்க்கைச் செலவு நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது. பல பிரச் னைகள் தலையெடுத்து நம் வளர்ச்சி யோடு போட்டி போடுகின்றன. இத்தகைய நிலையில் எதிர் நீச்ச லடித்துக் கொண்டிருக்கும் நம் பற்றுக் குறை வாழ்வில், திரு மணப் பிரச்னை மேலும் நம்மை கடனாளியாக்கி வாழ்வின்-முன் னேற்றத்தைத்தடை செய்து வரு கிறது. பூப்பெய்திய பல பெண் கள் தமக்குத் திருமணமாகவில் லையே என்று கண்ணீர் வடிக்கின் றனர். மற்ற புது மணத் தம்பதி களைக் காணுந்தோறும்,பெருமூச்சு விட்டுக் கொண்டு வாழும் அவர் கள் நிலையினையும், திருமணம் செய்விக்க வழியின்றி அலையும் தாய்தந்தையர்கள் நிலையினையும் நாம் எல்லாரும் தீவிரமாகச் சிந்தனை செய்ய வேண்டிய தரு ணம் வந்துவிட்டது. அதிலும் தந்தையற்ற பெண்களின் நிலை மிக மிகப் பரிதாபத்துக்குரிய தொன்ருகும். பலரின் உதவி யோடு தான் திருமணத்தை முடிக்க இயலும். திருமணத்திற்கு வாங்கிய கடன் நாளுக்கு நாள் வட்டியுடன் சேர்ந்து அப்பரம் பரைக்கே நீங்காத சுமையாக அமைவதால் எதிர்கால சந்ததி யினர் அனைவரும் இதனுல் பாதிக்கப்படுகின்றனர். திருமணச் செலவும், சடங்குகளும் பொருளா தார ரீதியாக அதிகமாக இருப் பதால் தான் இந்நிலை நிலவு கிறது. மண வினைக்கு மனப் பொருத்தம் முக்கியமே தவிரப் பணப் பொருத்தமல்ல. பணத் தால் விலைக்கு வாங்கப்பட்ட மாப் பிள்ளையை மனைவி கூட மதிக்க மாட்டாள். கணவனும், மனைவி யும் குடும்பம் என்ற வண்டியில் பூட்டப்பட்ட இரண்டு மாடுகள். இரண்டு மாடுகளும் இணைந்து போனுல்தான் குடும்ப வண்டி சீராகப் போகும். இதற்கு வரதட் சணைப் பிரச்னை தடையாக நிற் கிறது. 'கஞ்சி குடித்தாலும் பரவாயில்லை கணவன் வருமானத் தில் தானே வாழ்கிருேம்' என்ற பெருமையைப் பெற்றது நம் பெண்ணினம். மாமியார் வீட்டி லிருந்து எதிர் பார்த்து வாழும்

மாப்பிள்ளைக்கு எங்கும் மதிப்பு இல்லை. திருமணம் என்றால் சீதனம் எவ்வளவு தருவார்கள்? மாமியார் சாமானுக்கு எவ்வளவு தருவார்கள்? பின் முறைக்கு எவ்வளவு தருவார்கள் என்று வரவுக் கணக்கே நம்மவர்கள் போடுகிறார்கள். அதைத் தெரிந்துகொண்டு தான் மற்ற விபரங்களைக் கேட்கின்றார்கள். மற்றொரு பகுதியில் அது செலவுக் கணக்காகி விடுகிறது, எனபதனை அவர்கள் மறந்து விடுகின்றனர். இது திருமணம் பற்றி நாம் கொண்டிருக்கும் மிகக் குறைவான மதிப்பீட்டையே காட்டுகிறது. மாப்பிள்ளை வைத்திருக்கும் பெற்றோர்களும் பண வசதியுடைய பெற்றோர்களும் வழிகாட்டியாக நின்று திருமணம் ஆயிரங்காலத்துப் பயிர், அப்பயிர் வளர, மணவாழ்வின் அடிப்படை கணவன் மனைவி நல்லுறவே என்றறிந்து செயல் படவேண்டும்.

திருமணச் செலவு குறைக்கப் பட வேண்டும். திருமணங்கள் பொது மண்டபங்களில் மிக எளிய விருந்துடன் நடத்தப் பட்டால் தான் இந்நோக்கம் நிறைவேறும். வசதி படைத்தவர்கள் திருமணச் செலவை கௌரவப் பிரச்னையாகக் கருதாமல் கண்ணீர் மல்கி நிற்கும் கல்யாணப் பெண்களின் வாழ்க்கைப் பிரச்னையாகக் கருதவேண்டும்.

ஒரு ஆண் மகன் பிறந்தது முதல் கல்வி பெறும் வரை ஆன செலவை வசூலிக்க ஏழைப் பெண்ணின் தந்தைமார்கள் பகடைக் காயாகப் பயன் படுத்தக் கூடாது, என்று மாப்பிள்ளைமார்களின் தாய் தந்தையர்கள் விரசபதம் எடுக்க வேண்டும். நம் இளைஞர்கள் நல்ல மனப்பான்மையுடையவர்கள். ஆனால் பெற்றோர்களுக்குரிய மதிப்புக் கொடுக்கும் மாண்பு மிக்கவர்கள். ஆகவே இப்பிரச்னையில் பெரியோர்கள் முன் நின்று செய்யும் நல்ல முடிவுகளை மரபுகளாக்கிப் பின்பற்றுவார்கள் என்று உறுதியாகக் கூறுவேன்.

திருமணத்தைப் புனிதச் சடங்காகவும், வாழ்வின் திருப்பு முனையாகவும், தெய்வீக உறவாகவும் நாம் கருதுவது உண்மையானால் "மாப்பிள்ளை என்ன விலை" என்ற கேள்விக்கு முற்றுப் புள்ளி வைத்தே தீர வேண்டும். எதிர்கால சந்ததியினருக்கும், நம் நாட்டிற்கும் நாம் செய்யும் புனிதத் தொண்டு இதுவன்றி வேறில்லை.

நாட்டுக்குப் பெருந்தொண்டு
கணக்காய் வாழ்தல்
கேட்டுக்கே துணைசெய்யும்
அதிகக் கூட்டம்
திட்டமற்ற குடும்பத்தால்
நேர்ந்துவரும் பொல்லாங்கு
ஒன்று இரண்டா
உரைத்திடவே முடியாது
ஓரிரண்டு பிள்ளைகளை
உருவாகப் பெற்றெடுத்துப்
பாரினில் பெருந்தொண்டாம்
குடும்பநலம் போற்றிடுவோம்.

அருகிலுள்ள அரசினர் மருத்துவ மனை ஆரம்ப சுகாதார நிலையம், குடும்ப நலத்திட்ட நிலையம் ஒன்றை அணுகி, தேவையான தகவல்களைத் தெரிந்து கொள்ளுங்கள்.

வெளியீடு :
சுகாதாரம்—குடும்ப நலத்துறை
இயக்குநர்
அலுவலகம், சென்னை-6

சின்னச் சின்னக் கதை!

சிங்காரக் கதை

# மாப்பிள்ளைத் தோழன்!

அபிராமி அம்மாள் வீட்டிற்குச் சோதிடர் சுப்பண்ணு வந்தார். நான்கு பெண்களுடைய ஜாதகங்களைக்கொடுத்தார். "அபூர்வமான ஜாதகங்கள், இதில் ஒன்றை உங்கள் பையன் ராமனுக்கு நிச்சயம் செய்து விடுங்கள்'' என்றுகூறினர்.

அபிராமி அம்மாளுக்குக் கொள்ளை மகிழ்ச்சி. அந்த அம்மாளுக்கு ராமன் ஒரே பிள்ளை. அதனுல் மகிழ்ச்சி இருக்கத்தானே செய்யும், தாய் மகனை அழைத்தாள். "நான்கு பெண்களுடைய ஜாதகங்கள் வந்துள்ளன. நாளை, பெண் பார்க்கப் போக வேண்டும். ஒரு பெண் பிடிக்கா விட்டாலும் இன்னென்று பிடிக்கும்'' என்று கூறினுள்.

ராமன் மகிழ்ச்சியால் துள்ளினுன். மறுநாள் இந்தச் சட்டைதான் போட்டுக்கொள்ள வேண்டும். இந்தச் சரிகை வேட்டிதான் கட்டிக் கொள்ள வேண்டும் என்றெல்லாம் முடிவு செய்து கொண்டான். பெண் பார்க்கப் போகும் போது நல்ல சரிகைத் துண்டு ஒன்று போட்டுக் கொண்டு போனுல் நல்லது என்று அவனுக்குத் தோன்றியது.

ராமனுக்கு மிகவும் வேண்டிய நண்பன் சோமன். அவன் தீபாவளிக்குச் சரிகை போட்ட பட்டுத் துண்டு வாங்கியது அவன் நினைவிற்குவந்தது. சோமனிடம் ஓடினுன. பெண்பார்க்கப் போவதற்குத் தனக்குப் பட்டுத் துண்டு வேண்டும் என்று கேட்டான்.

சோமன் மகிழ்ச்சியோடு துண்டைக் கொடுத்தான். அதோடு அவன்சும்மா இருந்திருக்கக் கூடாதா? "நீ பெண் பார்க்கப் போகிற போது உன் உயிர்த் தோழனுன நான் வர வேண்டாமா?'' என்று கேட்டான்.

நமக்கு ஒரு தோழன் வருவது கௌரவம் தானே என்று எண்ணிய ராமன் அதற்கு உடன்பட்டான்.

மறுநாள் இருவரும் பெண் பார்க்கப் புறப்பட்டார்கள்.

பக்கத்தூரில் இருந்த பெண்ணை முதலில் போய்ப் பார்த்தார்கள்.

ராமனுக்குப் பெண்ணைப் பிடித்திருந்தது. தன் நண்பனுக்கு முதல் பெண்ணே பிடித்து விட்டதே என்று சோமன் மகிழ்ச்சி அடைந்தான்.

பெண்ணுக்குத் தகப்பனுர் மெல்லச் சோமனிடம் பேசத் தொடங்கினுர். மாப்பிள்ளையைப் பற்றிய விபரங்களைக் கேட்டார். சாதாரணமாகவா கேட்டார் துருவித்துருவிக் கேட்டார். "சொத்தெல்லாம் ராமனுடையதுதானே? அதில் வேறு யாருக்கும் பங்கு இல்லையே'' என்றுகேட்டார்.

"மாப்பிள்ளை போட்டிருக்கிற துண்டுஎன்னுடையது; மற்றதெல்லாம்அவனுடையதுதான்என்று'' சோமன் பெருமையோடு கூறினுன்

"துண்டே ஓசி என்றுல் இந்த மாப்பிள்ளைக்கு எப்படிப் பெண் கொடுப்பது''

என்று பெண்ணுக்குத் தகப்பனர் யோசித்தார்; பெண் தரமுடியாது என்று கூறிவிட்டார்.

ராமனும் சோமனும் அந்த வீட்டை விட்டு வெளியே வந்தார்கள். "துண்டு, பெரிய துண்டு இதைப் போய் பெருமையாய் உன் துண்டு என்பதைச் சொல்லி என் கல்யாணத்தைக் கெடுத்து விட்டாய்." என்று ராமன் சீறினன்.

இனி அப்படிச் சொல்லவில்லை என்று சோமன் கூறினன்.

அடுத்த பெண்ணைப் பார்க்க இருவரும் புறப்பட்டார்கள்.

அந்தப் பெண்ணின் தகப்பனர் மட்டும் என்ன சோடை போனவாரா? அவரும் ராமனைப் பற்றிச் சோமனிடம் விசாரித்தார். "எல்லாம் அவன் சொத்துத்தான் ராமன் போட்டிருக்கிருனே பட்டுத் துண்டு நிச்சயமாக உறுதியாக அதுவும் அவனுடையது தான்" என்று சோமன் கூறினன்.

துண்டைக் குறிப்பாகச் சொல்வதால்அது ஓசியாகத்தான்இருக்க வேண்டு என எண்ணிய அந்தத் தகப்பனர் தம் பெண்ணை ராமனுக்குக் கொடுக்க மறுத்து விட்டார்.

வீட்டை விட்டு வெளியே வந்ததும் "என்துண்டுஎன்று ஏண்டா சொன்னுய்" என ராமன் கூறினுன்.

"இனி உன் துண்டு என்று சிற வில்லையப்பா" என்று சோமன் அவனைச் சமாதானம் செய்தான்.

மூன்ரும் பெண்ணைப் பார்த்தார்கள். அங்கே அந்தப் பெண்ணின் தகப்பனரிடம் ராமன் போட்டிருக்கும் துண்டு என்னுடையதுமில்லை. அவனுடையதுமில்லை என்று சோமன் கூறினுன்.

மாப்பிள்ளையாக வந்தவனிடம் தான் ஒரு துண்டு இல்லை. அவன் தோழனிடம்கூட ஒரு துண்டு இல்லையே. மூன்ரும்மனிதரிடம்துண்டு ஓசிவாங்கும் நிலையில் உள்ளவனை நம்பி எப்படிப் பெண் கொடுப்பது, என்று எண்ணிய மூன்ரும் பெண்ணின் தந்தையும் தம் மகளை ராமனுக்கு மணம் செய்து வைக்க மறுத்துவிட்டார்.

ராமன் கண்கள் கோபத்தால் சிவந்தன. "பாவிப்பயலே துண்டைப்பற்றியே கூறி என் கல்யாணத்துக்கு உலை வைக்கிருயே" என்று எரிந்து விழுந்தான்.

"இன்னும்ஒருபெண் இருக்கிறது அதைப் போய்ப் பார்ப்போம் அங்கே நான் துண்டைப்பற்றி வாயே திறக்கமாட்டேன்" என்று கூறிய சோமன் நண்பனை அழைத்துக் கொண்டு புறப்பட்டான்.

நாலாவது பெண்ணை ராமன் பார்த்தான். அந்தப் பெண் கூடச் சுமார் தான். இருந்தாலும் எப்படியும் கல்யாணம் முடிந்தால் போதும் என்று எண்ணிப் பெண்ணைப் பிடிக்கிறது என்று அவன் கூறினுன்.

பெண்ணுக்குத் தகப்பனர் சோமன்அருகில்வந்து அமர்ந்தார். நீங்கள் தானே மாப்பிள்ளைத் தோழர் உங்களிடம் சில விசயங்கள் கேட்கவேண்டும் என்ருர்.

உடனே சோமன் படபடப்போடு "நீங்கள் எதைப் பற்றி வேண்மானுலும் கேளுங்கள் என் நண்பன் போட்டிருக்கும்பட்டுச்சரிகைத் துண்டைப்பற்றி மட்டும் கேட்காதீர்கள். நான் அதைப் பற்றி மட்டும் ஒன்றும் சொல்ல மாட்டேன். சொல்லமாட்டேன் என்ருல் உறுதியாகச் சொல்ல மாட்டேன்" என்று கூறினுன்.

"சொல்ல மாட்டேன் என்று கூறி எதையோ மறைக்கிறீர்கள். தனவே அதைச் சொன்னுல் என் என் பெண்ணை உங்கள்

நண்பருக்குக் கல்யாணம் செய்து தருவேன்'' என்று அந்தத் தந்தை கூறினார்.

"நான் சொன்ன வாக்கை மீற மாட்டேன். அந்தத் துண்டைப் பற்றிச் சொல்லமாட்டேன். என்றால் சொல்ல மாட்டேன்'' என்று சோமன் மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் திண்டாடியபடியே கூறினான்.

''நீங்கள் சொல்லமாட்டீர்கள்''

''நான் பெண்ணைத் தரமாட்டேன்'' என்று நான்காவது பெண்ணின் தகப்பனார் தெளிவாகக் கூறினார்.

சோமனை வெட்டி விடலாம் போல ராமனுக்குத் தோன்றியது.

நண்பர்கள் இருவரும் வெளியே வந்தார்கள்.

''முட்டாளே உன்னால் தான் கல்யாணம் கெட்டு விட்டது.'' என்று ராமன் சொன்னான்.

''இல்லவே இல்லை. முதலில் என் துண்டு என்று சொல்லக் கூடாது என்றாய் அடுத்த பெண் வீட்டில் உன் துண்டு என்று சொன்னேன். அப்புறம் உன் துண்டு என்றும் சொல்லக்கூடாது என்றாய். மூன்றாம் பெண் வீட்டில் இருவருடைய துண்டும் இல்லை என்றேன். துண்டைப் பற்றியே பேசாதே என்றாய். நான்காவது பெண் வீட்டில் நீ கூறியபடியே துண்டைப் பற்றியே பேசமாட்டேன் என்று உறுதியோடு கூறினேன். துண்டையும் ஒசி தந்து விட்டு இதற்குமேல் நான் என்ன செய்ய முடியும். முதல் வேலையாக என் பட்டுச் சரிகைத் துண்டைக் கொடு'' என்று கூறிய சோமன் ராமன் கழுத்தில் கிடந்த துண்டைத்தானே எடுத்துக் கொண்டு வேகமாக அங்கிருந்து நடந்தான்.

மூடனது நட்பு முக்காலும் தீமை என்பதை உணர்ந்தபடியே ராமன் நடந்தான். மூடர்களது தொடர்பு ராமனுக்கு மட்டுமென்ன எல்லாருக்குமே தீமை தானே?

சாண்டில்யன் அவர்கள்
சொல்லக் கேட்டு எழுதியவர்
நாகவல்லி அவர்கள்.

## ஆச்சியின் உலகம்

சென்ற இதழில் ராணி மெய்யம்மை ஆச்சி அவர்களைப் பற்றித் தாய்க் குலத்துப் பெரியவர்கள் சிலரின் அன்புக் கருத்துக்களை வெளியிட்டிருந்தோம். உள்ளத்தை நெகிழ வைக்கும் உயர்ந்த செய்திகள் என அவை பற்றிக் கடிதங்கள் எழுதிய அனைவருக்கும் எங்கள் நன்றி உரியது.

ராணி அவர்கள் குறித்து அன்னையர் குலத்தின் பெருமைக்குரிய இருவர் கருத்துக்களை இந்த இதழில் வெளியிடுகின்றோம்.

### என்றும் வாழ்வார்கள்

நம் சமூகத்தில் தோன்றிப் புகழுடன் வாழ்ந்தவரும், பெருந்தன்மையும், ஈகை, இரக்கம் போன்ற நற்பண்புகள் பலவும் நிரம்பி விளங்கியவருமான இராணி மெய்யம்மை ஆச்சியவர்கள் தமிழ் நாட்டில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தையும், தமிழிசை இயக்கத்தையும், அநேக தர்ம ஸ்தாபனங்களையும், பற்பல தொழில் நிறுவனங்களையும் தோற்றுவித்து மிகச் சிறப்பாகவும், திறம்படவும் நடத்திவரும் ராஜா சர் முத்தையா செட்டியாரவர்களின் அன்பிற்குரிய இல்லத்தரசியாரும், எனது நெருங்கிய உறவினரும் ஆவார்கள். அவர்கள் என்னிடம் எப்பொழுதுமே அலாதியான அபிமானத்துடனும், பேரன்புடனும் பழகுவார்கள். அவர்களது பெருமையும், இனிய உயரிய குணங்களும் அவர்களிடம் நெருங்கிப் பழகும் சந்தர்ப்பம் கிட்டாத பலருக்குத் தெரியாமலிருக்கலாம். ஆனால் அவர்களுடன் ஒன்றிப்பழகும் வாய்ப்பைப் பெற்றிருந்த நான் மிக நன்றாக அறிவேன்.

இராணி மெய்யம்மை ஆச்சியவர்கள் நம்மிடையே தோன்றி வாழ்ந்தது நமது சமூகத்திற்குப் பெருமை தருவதாகும். அவர்களை நாடிச் சென்ற நம் சமூகத்தினர் அடைந்த நன்மைகள் பல. ஏழ்மை காரணமாகப் படிக்க வசதியில்லாத தகுதிமிக்க மாணவ, மாணவிகளுக்கு உதவித் தொகை கொடுத்தும், ஊக்குவித்தும், கல்விக் கண்களைத் திறந்து, நல்ல எதிர்காலத்தையும் காட்டினார்கள். உத்தியோகத்திற்காக அவர்களை நாடிச் சென்றவர்களை இன்முகம் காட்டிவரவேற்று, அவர்களின் தகுதிக்கேற்றபடி இந்தியன் வங்கி, மதுரை சவுத் இந்தியா கார்ப்பொரேஷன் போன்ற பெரிய நிறுவனங்களிலும், பிற பல தொழில்துறை ஸ்தாபனங்களிலும் பரிந்துரைத்து வேலை வாய்ப்புக்கள் தேடித்தந்தார்கள். திருமணம் சம்பந்தமாகப் பொருள் உதவி

வேண்டிச் சென்றவர்களுக்கும் தக்க உதவி செய்தும், வசதி மிகக் குறைந்தவர்களின் திருமணச் செலவு பூராவுமே ஏற்றும், தகுந்த மண மகன் அல்லது மணமகள் தேடுவதில் அவர்களது உதவியை நாடி வரும் நம் சமூகத்தினருக்கு ஏற்ற இடங்களைக் காட்டியும், உதவிகள் அளித்தும் வந்தார்கள். அதுமட்டுமின்றி அவர்களை நாடிவரும் இன்ன பிற சமூகத்தினருக்கும் அவரவர்களது தேவைக்கேற்ப பொருளாலும், வாக்காலும் உதவிகள் பலவும் செய்துவந்தார்கள். அவர்கள் குடும் பத்தை அண்டிப் பிழைக்கும் சிப்பந்திகளின் குடும்பங்களுக்கும் தேவை நேரும்போது தக்க பொருளுதவியும், ஆதரவும் அளித்துவந்தார்கள். இயல்பாகவே ஆச்சியவர்கள் மிகுந்த தரும சிந்தையும், இரக்க குண மும் உடையவர்கள். இத்தகைய உயரிய பண்புகள் கொண்ட இராணி மெய்யம்மை ஆச்சியவர்கள் நம்மிடையிலிருந்து மறைந்துவிட்டது நமது சமூகத்திற்கு ஏற்பட்ட ஒரு பெரும் நஷ்டமாகும்.

அன்னாருடைய அருமை மகன் எதிர்பாரா வகையில் இளம் வயதிலேயே திடீரென இறைவனடி சேர்ந்த சோகத்தினுல் தான் அவர்கள் இவ்வளவு சீக்கிரத்திலேயே மறைந்து விட்டார்கள் அவர் கள் இப்பொழுது நம்மிடையே இல்லாவிடினும் அன்னாருடைய உதவி யால் பயன் அடைந்த எண்ணற்ற குடும்பத்தினருடைய உள்ளங்களில் எப்பொழுதுமே நிரந்தரமாக வாழ்ந்துவருவார்கள் என்பது திண்ணம்.

இராணி மெய்யம்மை ஆச்சியவர்களைப் போல் நம் சமூகத்தைச் சேர்ந்த செல்வாக்குமிக்க பெண்மணிகளும் தம்மிடம் உதவி நாடி வருப வர்களுக்குக் கூடியவரை ஒத்தாசையாயிருந்தால் மிக்க நலமா யிருக்கும்.

இராணி மெய்யம்மை ஆச்சியவர்களது ஆன்மா சாந்தியடைய வேணுமாய் இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

அ. மு. மு. அரு. லெஷ்மி ஆச்சி.

### எல்லார்க்கும் உதவியவர்

செட்டி நாட்டில் பள்ளத்தூரில் திரு ராமசாமி செட்டியார் அவர் கட்கும் திருமதி சிகப்பி ஆச்சி அவர்களுக்கும் திருமகளாக திருமதி ராணி மெய்யம்மை ஆச்சி அவர்கள் தோன்றினுர்கள்.

பிற்காலத்தில் வாழ்க்கையில் எவ்வாறு நடக்கவேண்டும் என்பதை நினைத்து பெற்ருேர்கள் அவர்களுக்கு மெய் அம்மை என பெயரிட்டு அழைத்தார்கள். பெற்ருேரும் உற்ருேரும் மற்ருேரும் மகிழ காதலோடு நம் அரசர் அவர்களை கைப்பிடித்து அவர்கள் காரியம் யாவற்றிலும் கை கொடுத்து வாழ்ந்தார்கள்.

மங்கையராகப் பிறப்பதற்கு நல்ல மாதவம் செய்திடவேண்டும். அவர்கள் நலத்தால் பாரில் அறங்கள் வளரும் என்ற கவிஞர் கூற்றுப் படி உலகத்தில் அறங்களை வளர்த்தார்கள். குறிப்பாக நம் அரசியார் அவர்கள் பெயரில் பெண்களுக்கு என்று தனி உயர்நிலைப்பள்ளியும் மற்றும் பற் பல தான தருமங்களும் ஏழை எளியவர்களுக்கு இலவச

உணவும் உடுப்பு முதலியனவும் பொருள் உதவிகளும் செய்திருக்கின்றார்கள். நம் இனத்தவர்களும் மற்றவர்களும் யார் ஒருவர் வேலை வேண்டும் என்று கேட்டாலும் மிக மனமகிழ்ச்சியுடன் பெயர், ஊர் வகையறுவைக் குறித்து வைத்துக் கொண்டு நல்லதொரு சந்தர்பத்தில் அரசர் அவர்களிடம் சொல்லி வேலை வாய்ப்பினை ஏற்படுத்திக் கொடுத்திருக்கின்றார்கள். அரசியார் அவர்களால் வேலை வாய்ப்புக் கிடைக்கப் பெற்றவர்களின் எண்ணிக்கை அளவிட முடியாத ஒன்றாகும்.

செல்வத்தில் சிறந்த குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் அதேசமயம் சதாரண குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் யார் போய் அரசியார் அவர்களிடம் திருமணம் முடித்துவிடவேணுமென்று சொன்னாலும் அதை தங்களது வேலையைக் காட்டிலும் பெரிதாக நினைத்து முன் நின்று முடிந்தும் அத்திருமணங்களைச் சிறப்பாக நடத்திக் கொடுக்கும் பண்பு வாய்ந்தவர்கள். எளிய குடும்பத்தினர் குடும்பங்களுக்கு பொருளுதவியும் மற்றும் சகல உதவிகளும் செய்து கொடுத்தும் அவர்கள் முடித்திருக்கும் திருமணங்கள் கணக்கில் அடங்கா.

கல்விக்கு என பொருள் உதவி கேட்டும், நர்சரி வகுப்பு முதல் வைத்தியக் கல்லூரி, விவசாயக் கல்லூரி, பொறியியல் கல்லூரி வரை உள்ள கல்வி நிலையங்களில் படிப்பதற்கும் சேர்வதற்கும் உதவி செய்யும்படி வரும் கடிதங்கள் அளவிற்கு மேற்பட்டவை.

அவ்விதம் வரும் எல்லாக் கடிதங்களுக்கும் மிகவும் மனமகிழ்வுடன் அவர்களுக்கு வேண்டிய உதவிகள் எல்லாவற்றையும் அரசியார் அவர்கள் அரசர் அவர்கள் மூலம் ஏற்பாடுகள் செய்து கொடுத்து உதவியதை நான் நேரில் இருந்து பார்த்திருக்கின்றேன்.

நம் இனத்துப் பெண்களுக்கு உரியதான பனை ஓலை கொண்டு பல வண்ணங்களில் வர்ணக் கொட்டான்களும் பெட்டிகளும் முடைவதில் மிகவும் ஆர்வம் உள்ளவர்கள். பெரும் செல்வந்தராக இருந்தும் இக்கைத் தொழிலில் அவர்கள் ஆர்வம் காண்பித்தது நம் இனத்துப் பெண்களாகிய எங்களுக்குப் பெரும் மகிழ்ச்சியை உண்டாக்கக் கூடியது. அரண்மனைக்கு வரும் சகல விருந்தினர்களுக்கும் கல்யாணத்திற்கும் மற்றும் சகல மங்களகரமான விசேஷங்களுக்கும் அழைக்க வருபவர்களுக்கு இந்த வர்ணக் கொட்டான்களில் பழங்கள் வெற்றிலை பாக்கு வகையறு வைத்துக் கொடுப்பதில் அரசியார் அவர்களுக்கு அளவு கடந்த மகிழ்ச்சி.

அரசியார் அவர்களிடம் கடந்த இருபது ஆண்டுகளாக நெருங்கித் தொடர்பு கொள்ளும் பாக்கியம் பெற்றவள். மெய்மைக்கு அம்மையாய் வாழ்ந்து வந்த நம் அரசி மெய்யம்மையார் அவர்கள் இன்று நம்மிடையே இல்லை. அவர்களது ஆசியும் அன்பும் நம் எல்லோரையும் என்றும் காப்பாற்றும்.

சுந்தரவல்லி வெங்கடாசலம் செட்டியார்

கோவை.

---

# திருமுகம்

சேவை தேவை

நம்முடைய சமூகத்தின் கட்டுக் கோப்பும் வளர்ச்சியும் குன்ருதிருக்க இப்படி ஒரு இதழின் சேவை இன்றியமையாத தேவையாகும்.

எம். எஸ். பி. சண்முகம்,
நியுடெல்லி-3.

தொடரட்டும் வளரட்டும்!

பாவலர் நாகசண்முகம் எழுதிய பழனிமலைக் காவடி, செட்டிநாட்டு முறையில் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. வட்டார மொழிக்கு அது ஒரு வளமான இலக்கியப் படைப்பாகும். அரசி மெய்யம்மை பற்றிய அஞ்சலி மொழிகள் உள்ளம் உருக்குபவை. சோழர் குலக் கொடி கவிதை சொற்சுவை, பொருட் சுவையோடு அற்புதமாக அமைந்துள்ளது. அதனைப் படைத்த இலக்குமி அவர்களுக்கு எனது பாராட்டுக்கள். பயணக் குறிப்புகள் எழுச்சியூட்டுகின்றன. தொடரட்டும் நகரத்தார் பயணம் வளரட்டும் அதன் பணிகள்!

அரு. சோமசுந்தரம் எம்.ஏ.பி.டி.
முதல்வர்
செட்டிநாடு தனிப்பயிற்சிக் கல்லூரி.

என்றும் வாழி

மலரின்-மணமே கண்டேன்
மயக்கும் வனப்புக் கண்டேன்
பலரின் உதவி கண்டேன்
பயண நன்மை கண்டேன்
அலரும் நீங்கக் கண்டேன்.
அமைநாள் முதலிற் கண்டேன்
பலரின் கரத்தே கண்ட
பசுமை என்றும் வாழி!

வெ. சு. அழகப்பன் எம்.ஓ.எல்.
முதல்வர்
கணேசர் செந்தமிழ்க் கல்லூரி

நிறுத்துங்கள்!
ஐஸ் வேண்டாம்!

பழநிமலைக் காவடி கதை நன்ருக இல்லை. உடனே நிறுத்துங்கள். இன்ருரை இன்னர் என்ருல் போதும். சும்மா அவர்கள் என்றும் அப்படிப் பட்டவரென்றும் அடைமொழிகள் அநாவசியம். அளவுக்கு அதிகமாக ஐஸ் வைக்கிறீர்கள்.

லெ. இராமநாதன்,
குண்டூர்.

மனமுவந்த பாராட்டுக்கள்!

பாராட்ட வேண்டாதவர்களைக் கூடப் பாராட்டிக் கொண்டிருக்கின்ற இந்த உலகில் பாராட்ட வேண்டியவர்களைக்கூட நம்மவர்கள் பாராட்டுவதில்லை. பயணக் கட்டுரை மூலம் நீங்கள் அந்தக் குறையை நீக்கி உள்ளீர்கள். நம் இனத்திலும், தலைவர்களும் தளபதிகளும் தோன்ற முடியும் என்று காட்டியிருக்கிறீர்கள். பாராட்ட வேண்டியவர்களை மனம் விட்டுப் பாராட்டிய உங்களுக்கு என் மனமுவந்த பாராட்டுக்கள்!

எம். வி. எம். அழகப்பன் எம்.ஏ.

# ஹோட்டல் அலங்கார் திறப்புவிழா



விழாவில், திருச்சி நகரத்தார் சங்க முன்னாள் தலைவர் ஆவி. க. ஆவிச்சிச் செட்டியார் அவர்கள் உரையாற்றுகிறார்கள்.

மதுரை நகரத்தார் சங்கச் செயலாளரும் ஹோட்டல் அமைப்பாளருமான ஆவி.க. தியாக ராசச்செட்டியார் அவர்கள் உரையாற்றுகிறார்கள்.

# செய்தி மலர்



ஆலை அரசர், கலைத்தந்தை. கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்கள் மங்கல விளக்கினை ஏற்றி வைத்து மதுரையம்பதியில் நவீனவசதிகள் முற்றும் நிறைந்த புதிய தங்கும் விடுதியான ஹோட்டல் அலங்காரைத் தொடங்கி வைக்கிறார்கள்.

புதிய புதிய தொழிகளில் நம் மரபினர் ஈடுபடவேண்டும் என்ற பெரு விருப்பத்திற்கு ஒரு நல்ல பரிசாக ஆ. வி. க. குடும்பத்தினர் மதுரை நகரில் நவீன வசதிகள் கொண்ட ஹோட்டல் அலங்கார் என்ற தங்கும் விடுதியினைத் தொடங்கியுள்ளார்கள். அந்த விழா கலைத் தந்தை அவர்களால் 7—2—71 ஆம் நாள் தொடங்கிவைக்கப்பெற்றது. அந்த விழாவினை ஒட்டி நடந்த சிறப்புக் கூட்டத்திற்குக் கலைத் தந்தை அவர்கள் தலைமை தாங்கினார்கள். ஆ. வி. க. தியாகராச செட்டியார் அவர்கள் அனைவரையும் வரவேற்றார்கள்.

மகாலட்சுமி நூற்பாலை அதிபர் எல். அழகுசுந்தரம் செட்டியார் அவர்கள், இராமநாதபுரம் வர்த்தக சங்கத்தலைவர் திரு. வி. பி. ஆர் கங்காராம் துரைராஜ், முன்னாள் நீதிபதி திரு.பி. ரெங்கசாமிநாயுடு, மதுரை மருத்துவக் கல்லூரிப் பேராசிரியை டாக்டர் திருமதி லலிதா காமேஸ் வரன்ஆகியோர் ஆவி. க. குடும்பத்தினரைப் பாராட்டியதுடன் இந்த நன்முயற்சியை மிகவும் வரவேற்று உரையாற்றினார்கள்.

விழாவிற்கு மதுரை நகர்ப் பல் துறைப் பெருமக்களும் வெளியூர்ப் பெருமக்களும் வந்து சிறப்பித்தார்கள். செட்டி நாட்டரசர், விஞ்ஞான மேதை ஜி. டி. நாயுடு, இந்தியா லெதர் கார்பொரேஷன், ஏ. நாகப்ப செட்டியார் இன்னும் பல பெரியவர்களிடமிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்திருந்தன.

செய்தி : காரைக்குடி.
அண்ணாமலை

## ஆத்தூரில் அறச்செயல்

தொழில் செய்கின்ற நாடுகளிலெல்லாம் அறம் வளர்த்தவர்கள் நம் மரபினர். அந்த உணர்வு இன்னும் நம்மிடையே மறைந்துவிடவில்லை என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டாக, சேலம் மாவட்டம் ஆத்தூரில்வாழும் நம் மரபினர் சிறந்த செயல் ஒன்றை மேற்கொண்டிருக்கிறார்கள்.

ஆத்தூர் அகிலாண்ட ஈஸ்வரி சமேத கரிய நிர்மலேஸ்வரர் கோயில் திருப்பணியினை பொது மக்கள் குழு ஒன்றினை அமைத்து மேற்கொண்டுள்ளார்கள்.

அக்கோயிலில் விளங்குகின்ற சுப்பிரமணிய சுவாமி கர்ப்பக்கிரகம் அர்த்த மண்டபம் இவற்றை கல் திருப்பணியில் உருவாக்க ரூபாய் இருபதாயிரம் செலவாகும். அச்செலவினை ஆத்தூர் வாழ் நகரத்தார் ஏற்று அத்திருப்பணியினை முடித்துத் தரவேண்டும் என்றும் அதனைப் போற்றி ஆத்தூர் நகரத்தார் திருப்பணி எனப் பட்டயம் எழுதி வைப்பதாகவும் திருப்பணிக் குழுவினரும் பொது மக்களும் கேட்டுக்கொண்டதை ஒட்டி நகரத்தார் பெருமக்கள் கூடி ஆயிரத்திற்கு ரூபாய் ஐந்து வீதம் தொழில் புரிபவர்கள் அனைவரும் மகமை எடுத்து அத் திருப்பணியை நிறைவேற்றுவது என முடிவு செய்துள்ளார்கள்.

பிற இனத்தவர் ஊராக விளங்குகின்ற மேற்படி ஊர். மேற்படிக் கோயிலின் தர்மகர்த்தாக்களில் ஒருவராக வேந்தன்பட்டி ஏ. எஸ். ஏ. திருப்பதிச் செட்டியார் அவர்கள் விளங்கி வருகிறார்கள் என்பது பெமைக்கு உரியதாகும். ஆத்தூர் மக்களுக்கு நம் நன்றி உரியது.

செய்தி : இராமநாதன்

## மாரியம்மனுக்கு மண்டபம்

அருள் முருகனது அறுபடை வீடுகளில் ஒன்றான பழநித் திருநகரில் தொழில் செல்வராக விளங்குகின்ற பலவான்குடி. திரு-



திருமதி மீனு முத்தையா அவர்கள் சென்னை நகர உதவி ஷெரீப்பாக (Under Sheriff) நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதனை மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

---

பழ. வீ. க.ராமசாமிச் செட்டியார் அவர்கள் மாரியம்மன் கோயில் கம்பத்திற்கு மண்டபம் அமைத்து அதற்கு மாரியம்மன் சிலையமைந்த கோபுரம் அமைத்து 18—2—71 ஆம் நாள் சிறப்பான ஆராதனைகளுடன் திறந்து வைத்து ஏழைகளுக்கு அன்னதானம் வழங்கினார்கள். பழநி மாநகர் வாழும் நம் இனத்துப் பெருமக்கள் அனைவரும் விழாவிற்கு வந்து சிறப்பித்தார்கள்.

செய்தி : மேலைச்சிவபுரி

எம். ராமசாமி

புதிய கடை

மைலாப்பூர் கிழக்கு மாடவீதி 23ம் எண் கட்டிடத்தில் திரு.எஸ். இராமநாதன் அவர்கள் சுவர்ணா ஏஜன்சீஸ் என்ற புதிய கடையைத் திறந்துள்ளார்கள். எம் சன்ஸ் பாக்கர்ஸ் அன் கன்பெக்சனர்சுக்கு ஸ்டாக்கிஸ்டாக விளங்குகிறார்கள்.



மருத்துவக் கல்லூரியில் இடம் பெறப் போராடும் செல்வன் பெரியகருப்பன்.



தந்தை,
டாக்டர் அண்ணாமலை.



தாய்
ராமாயி ஆச்சி

# சங்கப்பலகை

## மதுரை

**பதினான்காம் ஆண்டுவிழாவும்**

**பாராட்டு விழாவும்**

7-2-71ம் நாள் ஞாயிற்றுக்கிழமை, காலை பத்துமணி அளவில் மதுரை நகரத்தார் சங்க, பதினான்காம் ஆண்டுவிழா கலைத் தந்தை கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அதோடு அண்மையில் பஞ்சாயத்து ஒன்றிப்புத் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சிவகங்கை ஊராட்சி ஒன்றியத் தலைவர் திரு. க. அரு. சோம. இராமநாதன் செட்டியார். கல்லல் ஊராட்சி ஒன்றியத் தலைவர், திரு. சுண்ணப்பா, வள்ளியப்பா, கீழ்த்திசை நாடுகளில் சுற்றுப்பயணம் செய்து வந்த மதுரை லட்சுமி பேப்பர் ஸ்டோர்ஸ் உரிமையாளர் திரு. எம் சிங்காரம் செட்டியார் ஆகியோருக்குப் பாராட்டு விழாவும் நடைபெற்றது.

செல்வன். தி. அருணாசலம் இறை வணக்கம் பாட, செயலாளர் திரு. ஆவி. க. மெ. அரு. தியாகராசச் செட்டியார் அவர்கள் அனைவரையும் வரவேற்றார்கள். மற்றொரு செயலாளரான திரு. டாக்டர் சுப. அண்ணாமலை அவர்கள் ஆண்டு அறிக்கையினை வாசித்தார்கள்.

மகாலட்சுமி நூற்பாலை அதிபர். திரு. லெ. அழகு சுந்தரம் செட்டியார் சரசுவதி நாராயணன் கல்லூரித் தமிழ் விரிவுரையாளர் கரு. முத்தையா எம். ஏ. தியாகராசர் கல்லூரி விலங்கியல் விரிவுரையாளர் திருமதி சுலோசனா சேவுகஞ் செட்டியார் எம். ஏ. கொ. லட்சுமிபுரம் திரு. கதி. ராம. இராமசாமிச் செட்டியார் ஆகியோர். சங்கச் செயல்களையும், சிறப்பு விருந்தினர்களையும் பாராட்டி உரை வழங்கினார்கள்.

பாராட்டுரைக்குச் சிறப்பு விருந்தினர் நன்றி கூறி உரையாற்றினார்கள்.

கீழ்க் கண்டவர்கள் இவ்வாண்டு நிர்வாகக் குழுவினராக ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள்.

**தலைவர்:**

கலைத்தந்தை. கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்கள்

**துணைத் தலைவர்கள்:**

லெ. அழகு சுந்தரம் செட்டியாரவர்கள், இராம. வீர. இராம. இராம சாமிச் செட்டியார் அவர்கள்.

**செயலாளர்கள்:**

ஆ. வி. க. மெ. அரு. தியாகராசச் செட்டியார் அவர்கள், டாக்டர் சுப. அண்ணாமலை அவர்கள்.

**பொருளாளர்:**

சுப. அ. நடராசன் செட்டியார் அவர்கள்

**கணக்காளர்:**

வெ. சுப. இராமநாதன் செட்டியார் அவர்கள், ஏ. இராமநாதன் செட்டியார் அவர்கள்.

மற்றும் செயற்குழு உறுப்பினர்களாக முப்பத்தொரு பேர்கள் தேர்ந் தெடுக்கப்பட்டுள்ளார்கள்.

**தீர்மானங்கள்:**

1. அண்மையில் சேலத்தில் நடைபெற்ற மூட நம்பிக்கை ஒழிப்பு மாநாட்டில், சமய உணர்வுடைய மக்களின் உள்ளமெல்லாம் புண்படும் வண்ணம் குறிஞ்சி நிலத் தெய்வமும், நகரத்தாரின் வழிபடு கடவுளும், தமிழ்ப் பெருந் தெய்வமும் ஆகிய முருகன், இராமர் ஆகிய இறைவர் திருவுருவங்களைப் பழிக்கும் இழி செயல்களைச் செய்தும், மனை மங்கலமாகிய மாதரின் கற்பினை இழிவுபடுத்தும் வண்ணம் சட்டமியற்று மாறு தீர்மானம் நிறைவேற்றியும் தமிழ்ப் பண்பாட்டிற்கே முரணான செயல்களைச் செய்தோரை இக்கூட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது.

2. நம் இனத் திருமணங்களில் பிறர் பார்த்துப் புகழ்வதற்கென்றே பொருள்களைப் பரப்புதல், மணமகனின் தாயாருக்குக் கொடுக்கும் வரை பொருள் நாளுக்குநாள் உயர்ந்து கொண்டே போதல் முதலிய கட்டாய மான வரைமுறைகள் நிலவுவதால் அலுவலர்களும், வசதிக் குறை வானவர்களும் மிகவும் இடர்ப்படுகின்றனர். இதன் விளைவாக நம் கண் முன்பாகவே ஒவ்வொரு வீட்டிலும் கன்னிப் பெண்கள் திருமணம் செய்யப்பெருமல் வருந்துகின்றனர். இந்நிலை நீடித்தால் நம் குலத்தின் பெயர் மிகவும் தாழ்வுறும். எனவே சீர் பரப்புதல் உடனடியாக நிறுத் தப்பெற வேண்டுமென்று இக்கூட்டம் ஒருமனதாகத் தீர்மானிக்கிறது.

3. பர்மா, மலேயா, செய்கோன், இலங்கை நாடுகளில் உள்ள நகரத்தாரின் அறக் கட்டளைப் பொது நிதிகளை ஒன்று சேர்த்துக் கணக் கிட்டு, நம் நாட்டிற்குக் கொண்டு வருவதற்குரிய ஏற்பாடுகளை விரைவில் செய்து அந்நிதிகளால் நம் நாட்டில் நகரத்தார்களும் பிற மக்களும் பயன் பெறவும், சிவநெறியும் அறச் செயல்களும் வளரவும் செயற்படு மாறு, மேற்கண்ட ஊர்களின் நகரத்தாரையும் இதற்கான தூண்டு

தலைச் செய்யுமாறு நகரத்தார் ஐக்கிய சங்கத்தையும் பிற ஊர் நகரத்தார் சங்கங்களையும் இக்கூட்டம் வேண்டுகிறது.

4. இராமநாதபுரம் மாவட்டம் வானம் பார்த்த பூமியாக இருப்பதாலும் எவ்வகையான முன்னேற்றமும் காணாதிருப்பதாலும் இம்மாவட்டத்திற்கும் திருச்சி மாவட்டத்திற்கும் மையமாக உள்ள ஒரு இடத்தில் வேளாண்மைக் கல்லூரி ஒன்று அமைக்கத் தமிழ்நாட்டு அரசை இக்கூட்டம் ஒருமனதாக வேண்டுகிறது.

5. சென்னையில் அனைத்து ஊர் நகரத்தார்களின் நன்மைக்காகவும், முன்னேற்றத்திற்காகவும் ஏற்படுத்தப் பெற்ற நகரத்தார் ஐக்கிய சங்கம் தோன்றி ஏழு ஆண்டுகளாகியும் இன்னும் இன்றியமையாத பணிகள் பலவும் ஆற்றவேண்டிய நிலை உள்ளது. அச் சங்கம் உண்மையிலேயே நம் குலத்தினரின் துன்பங்களை நீக்கி நன்மை செய்ய வேண்டுமானால் அதன் நடைமுறையும், தலைமை இருப்பிடமும் உடனடியாகச் செட்டிநாட்டுப் பகுதிக்கு மாற்றவேண்டுமென்று இக்கூட்டம் ஒருமனதாகத் தீர்மானிக்கிறது.

6. கோவில் வழிபாடு ஆற்ற வருபவரும், உடல் நலத்திற்கு மருத்துவம் பார்க்க வருபவரும், தங்கும் பொதுநிலையமாக மதுரை நகர விடுதி இருந்துவருகிறது. இது போன்று இயங்கிவரும் காசி, பழனி ஆகிய நகரவிடுதிகளுக்கு நகராட்சி வரி விதிப்பதில்லை. மதுரையில் இதுபோன்ற பொது நிறுவனங்களுக்கும் நகராட்சி வரி விதிப்பதில்லை. அதுபோன்று மதுரை நகர விடுதிக்கும் நகராட்சி வரி விதிப்பினின்று விலக்களிக்குமாறு தமிழ்நாட்டு அரசினரையும், மதுரை நகரவையினரையும் இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

இச்சங்கத்தின் அவசரக் கூட்டம் 21. 2. 72ம் நாள் ஞாயிற்றுக் கிழமை காலை பத்தரை மணி அளவில் சங்கத் தலைவர் திரு. கருமுத்து. தியாகராசச் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அது பொழுது கீழ்கண்ட தீர்மானம் ஒரு மனதாக நிறைவேற்றப்பட்டது.

"தமிழக மருத்துவக் கல்லூரிகளுள் ஏதேனும் ஒன்றில் இடம் வேண்டி மதுரை டாக்டர் பெரி. அண்ணாமலையின் மகன் திரு. ஏ. பெரியக்கருப்பன் அளித்த விண்ணப்பத்திற்கு அவரது உயர்ந்த கல்வித் தகுதியைக் கருதாமல், அவரைத் தேர்ந்தெடுக்கவில்லை. அதன்மேல் அவர் இந்தியத்தலைமை நீதிமன்றத்தில் நீதிவேண்டித் தொடுத்த வழக்கில் நீதிபதிகள் அவருக்கு ஆதரவாக இரண்டு முறை தெரிவித்த கருத்துக்கு மாறாக மூன்றும் முறையாகவும் அவரைத் தேர்ந்தெடுக்காததால் மருத்துவக் கல்லூரித் தேர்வுக்குழு, நீதிக் கோட்பாடுகளுக்கே புறம்பாக நடந்து கொண்டிருப்பதாக சங்கம் கருதுகிறது. கல்வி நிலையத்தில் தமக்கு முறையான தேர்வு கிடைக்க வேண்டும் என்று இம்மாணவர் முயல்வதை, அரசு தனது கௌரவச் சிக்கலாகக் கருதக் கூடாது என்றும் இச்சங்கம் கருதுகிறது. ஆதலால் இம்மாணவரது விண்ணப்பத்தைப் பரிவோடு கவனித்து அவருக்கு மருத்துவக் கல்லூரியில் இடமளிக்குமாறு அரசை இச்சங்கம் வேண்டிக் கொள்கிறது.

இக்கருத்தை வலியுறுத்தி மாணவருக்கு நீதி வேண்டித் தமிழக ஆளுநருக்கும், முதலமைச்சர், கல்வி, சுகாதார அமைச்சர்களுக்கும் தந்திகள் அனுப்பப்பெற்றிருக்கின்றன.

மதுரை நகரத்தார் மாணவர் சங்கத் துவக்கவிழா.

உலகம் எங்கும், மாணவர் அமைப்புக்கள் இன்றியமையாத இடத்தைப் பெற்று வருகின்ற காலமிது.

மாணவர்கள் கல்வி கற்பதோடு கடமை உணர்வுடையவர்களாகவும் பொதுப் பணிகளை மேற்கொள்பவர்களாகவும் திகழ்வது மிகவும் சிறப்புடையதாகும். இத்தகைய சிறப்புடைய நம் இனத்து மாணவச் செல்வர்கள்பலர் நற்பண்புரிவதையே தம் தலையாய கொள்கையாகக் கொண்டு மதுரை நகரத்தார் சங்கத்தினைத் துவக்கியுள்ளார்கள்.

அந்த விழா 27. 2. 71ம் நாள் ஹோட்டல் அலங்காரில் நடைபெற்றது.

சங்கத் தலைவர் திரு. ஆர். முத்தையா அவர்கள் வரவேற்புரைக்குப் பின், திரு. கருமுத்து. தி. சுந்தரம் செட்டியார் அவர்கள் தலைமை உரை நிகழ்த்தினார்கள். திரு. லெ. நாராயணன் செட்டியார் அவர்கள் சங்கத்தைத் துவக்கி வைத்து உரையாற்றினார்கள். திரு. கருமுத்து. தி. மாணிக்கவாசகம் செட்டியார், திரு. ஆவி. க. தியாகராசன் செட்டியார், டாக்டர். சுப. அண்ணாமலை, பேராசிரியர் சங்கர நாராயணன், மாணவர் திரு கண்ணப்பன் ஆகியோர் வாழ்த்துரைக்குப் பிறகு திரு. கருமுத்து. தி. மாணிக்கவாசகம் செட்டியார் அவர்கள் தலைமையில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

(1) குளிபிறை டாக்டர். பெரி. அண்ணாமலை அவர்கள் மகன் திரு. பெரிய கருப்பனுக்கு, இரு முறை இந்திய தலைமைநீதி மன்றத்தில் தமிழக மருத்துவக் கல்லூரிகளுள் ஏதேனும் ஒன்றில் இடமளிக்குமாறு தீர்ப்புக் கூறியும், மூன்றும் முறையாக, மாணவரின் உயர்ந்த கல்வித் தரத்தைக் கருதாது, இடமளிக்க அரசு மறுத்துவிட்டது. இச்சங்கம் அம்மாணவருக்கு இடமளிக்க வேண்டுமென அரசை வேண்டிக் கொள்ளுகின்றது.

(2) தியாகராசர் கல்லூரியைச் சேர்ந்த டாக்டர். இராம. பெரிய கருப்பன் அவர்கள் தமிழ்நாட்டின் சார்பில் டெல்லி சென்று குடியரசு தினவிழாவை ஒட்டி நடைபெற்ற "அனைத்து மொழிக் கவிதை அரங்கில்" கலந்து கொண்டமைக்கு இச்சங்கம் பாராட்டுகின்றது.

(3) இச்சங்கத்தின் உறுப்பினர்கள் எக் கைமாறும் கருதாது, கதை, கட்டுரைகள் எழுதி "நகரத்தார்" திங்கள் இதழுக்கு அளிக்க முயல்வோம் என உறுதி கூறுகின்றோம்.

(4) இச்சங்கம் இக்கல்வி ஆண்டின் இறுதியில் ஆரம்பிக்கப்பட்டதால், அனைத்துக் கல்லூரி மாணவர்களும் சேர்ந்து பயன் பெறும் வண்ணம் அமைக்க இயலவில்லை. தற்போது தியாகராசர் கல்லூரி மாணவர்கள் மட்டும் பங்கு பெற்றுள்ளனர். வரும் கல்வி ஆண்டிலிருந்து அனைத்துக் கல்லூரி மாணவ, மாணவியரும் பயன் பெறும் வண்ணம் விரிவாக்கப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

சங்கச் செயலர் திரு. என். இலக்குமணன் அவர்கள் நன்றியுரை கூற, நாட்டுப் பண்ணுடன் விழா இனிது நிறைவேறியது.

தலைவர்.

ஆர். முத்தையா— (எம். ஏ. இரண்டாம் ஆண்டு)

துணைத்தலைவர். பொருளாளர்.

கரு. மெய்யப்பன்— (எம். ஏ. முதல் ஆண்டு)

செயலர்கள்

என். இலக்குமணன்— (பி· எஸ். சி. மூன்றும் ஆண்டு)

கே. ஆர். முத்தையா— (பி. எஸ். சி. இரண்டாம் ஆண்டு)

வி. வெங்கடாசலம் (பி. ஏ. முதல் ஆண்டு)

மற்றும் முப்பதி நான்கு உறுப்பினர்களைக் கொண்டு சங்கம் துவக்கப் பெற்றது.

## திருச்சி

இந்நகர்ச் சங்கத்தின் மாதாந்திரக் கூட்டம் 28-2-71 ஆம் தேதி ஞாயிற்றுக் கிழமை காலை 10-30 மணிக்குச் சங்கத் தலைவர் திரு. ஏர். ஆர். அண்ணாமலை செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் கீழ்க்கண்ட தீர்மானம் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

தமிழக மருத்துவக் கல்லூரிகளில் ஏதேனும் ஒன்றில் இடம் வேண்டி மதுரை டாக்டர் பெரி. அண்ணாமலையின் மகன் திரு. ஏ. பெரியகருப்பன் அளித்த விண்ணப்பத்திற்கு அவரது உயர்ந்த கல்வித் தகுதியைக் கருதாமல் அவரைத் தேர்ந்தெடுக்கவில்லை. அதன்மேல் அவர் இந்தியத் தலைமை நீதிமன்றத்தில் நீதிவேண்டித்தொடுத்த வழக்கில் நீதிபதிகளின் இரண்டுமுறை தெரிவித்த தீர்ப்புக்கு மாருக மூன்றும் முறையாகவும் அவரைத் தேர்ந்து எடுக்காததால் மருத்துவக் கல்லூரி தேர்வுக்குழு நீதிக்கோட்பாடுகளுக்கே புறம்பாக நடந்துகொண்டு இருப்பதாக சங்கம் கருதுகிறது.

கல்வி நிலையத்தில் தமக்கு முறையான தேர்வு கிடைக்கவேண்டும் என்று இம்மாணவர் முயல்வதை அரசு தனது கௌரவச் சிக்கலாகக் கருதக்கூடாது என்று இச்சங்கம் கருதுகிறது. ஆதலால் இம்மாணவரது விண்ணப்பத்தை பரிவோடு கவனித்து அவருக்கு மருத்துவக் கல்லூரியில் இடமளிக்குமாறு அரசை இச்சங்கம் வேண்டிக் கொள்கிறது.

கூட்டத்தில் "நம் நாட்டின் இன்றைய நிலையில் நம்மவர்" என்ற தலைப்பில் நிர்மலா இண்டஸ்ட்ரீஸ் உரிமையாளர் திரு. வி. ஆர். கிருஷ்ணன் செட்டியார் அவர்கள் உரையாற்றுகையில் "நம்மவர்கள் பற்பல தொழில்களில் ஈடுபடவேண்டும். பெண்கள் வீண்பொழுது போக்காமல் சிறுசிறு தொழில்களைச் செய்யவேண்டும். திருச்சியில் நம்மவர்கள் ஆதரவில் கல்வி நிறுவனம் ஒன்று உருவாக வேண்டும்" என்று குறிப்பிட்டார்கள்.

திருச்சி உண்டலண்ட்ஸ் ஒட்டல் நிர்வாகி திரு. வி. என். என். நாகப்பசெட்டியார் உரையாற்றுகையில் "பணம்-மனம்-குணம் ஒருசேர அமைந்து நம் இளைஞர்கள் ஆராய்ச்சி நோக்குடன் தொழில்களில் ஈடுபட்டு சிறப்படைய வேண்டும்" என்று குறிப்பிட்டார்கள். கூட்ட முடிவில் வந்திருந்தவர்கள் தங்களைத் தாங்களே அறிமுகம் செய்து கொள்ளும் சுவையான நிகழ்ச்சியுடன் கூட்டம் இனிது முடிந்தது.

செய்தி வள்ளியப்பன்.

# ஆயுள் உறுப்பினர்

எஸ் எம். ரெங்கநாதன்
(சிருவயல்)
பொறுப்பாளர்
சௌத் இந்தியா கார்பொரேஷன்
ஏஜன்சீஸ் (பி) லிமிடெட்
6/50 ரேஸ் கோர்ஸ் ரோடு
கோவை

என். கே. நாகப்ப செட்டியார்
(அலவாக் கோட்டை)
15. டாட்டாபாத் இரண்டாம் தெரு
கோவை, 12

ஏடி. சிங்காரம், பி. எஸ் சி.
(கண்டவராயன்பட்டி)
தியாகராஜா கார்பொரேஷன்,
104. ஜெயில் ரோடு,
கோவை. 18.

கே. பி. எஸ். சேதுராமன்
(வேந்தன்பட்டி)
ராம்நகர், நேரு தெரு,
கோவை. 9.

எல். சண்முகம் செட்டியார்,
ஓ. சிறுவயல்,
சௌத் இந்தியா கார்பொரேஷன்
(பி) லிமிடெட்
10/130, ஜெயில்ரோடு,
கோவை.

சு. முரு. ச. முருகப்ப செட்டியார்,
(கோனாபட்டு)
138. கிழக்கு சம்பந்தம் சாலை,
R. S, புரம்,
கோவை

C. லெட்சுமணன்,
ஆடிட்டர்
(குளிபிறை)
25/ 57. சுப்பையா முதலியார்
தெரு, கோவை.

N. அண்ணாமலை.
(நாட்டரசன் கோட்டை)
நடராஜா அன்கோ,
442. ராஜவீதி,
கோவை-1.

KR. ஆண்டியப்பசெட்டியார்,
441. ராஜ வீதி,
ஜெயா பார்மா டிஸ்டிரி-
பியூட்டர்ஸ்,
கோவை-1.

S. சோம சுந்தரம் செட்டியார்,
(நற்சாந்து பட்டி)
சோமுலாட்ஜ்,
தபால்பெட்டி எண் 227,
யூனியன் ஹைஸ்கூல்ரோடு,
கோவை-1.

எஸ் எம். நாகப்பன்,
(வேந்தன்பட்டி)
8 B/16, இராமலிங்கநகர்,
கோவை, 11.

S. தியாகராஜன்,
(மகிபாலன்பட்டி)
அட்வகேட்,
இராமலிங்கநகர்,
கோவை-11.

AN. வெங்கிடாசலம் செட்டியார்,
(தேவகோட்டை)
ஜெனரல் மானேஜர்,
லோட்டஸ் மில் லிமிட்டெட்,
சுந்தராபுரம்.
கோவை,

எஸ். முத்து
(பள்ளத்தூர்)
ஏஜண்ட்
இந்தியன் பாங்க்,
காரைக்குடி.

எஸ். என். ஏ. எஸ். ஏ.
அண்ணாமலை செட்டியார்
71, மெ. மெ. வீதி,
காரைக்குடி.

ஏ. எல். எஸ்.
அழகப்பசெட்டியார்,
176, வ. உ. சி. தெரு,
காரைக்குடி.

சி. சுந்தரம்,
(பூலாங்குறிச்சி)
ஸ்ரீ ராஜேந்திரா மில்ஸ் லிமிடெட்
1, ராமகிருஷ்ணாரோடு,
சேலம்-7.

சி. வள்ளியப்பா,
(பூலாங்குறிச்சி)
வள்ளியப்பா டெக்ஸ்டைல்ஸ்,
11, லெவல்லா ரோடு,
பெங்களூர்—1.

S. முத்து அவர்கள்
(பள்ளத்தூர்)
ஏஜண்ட்
இந்தியன் பாங்க்
காரைக்குடி.

எஸ். என். ஏ. அண்ணாமலை
செட்டியார்
71, மெ. மெ. வீதி
காரைக்குடி.

AL. S. அழகப்ப செட்டியார்
176, V. O. E. ரோடு
காரைக்குடி

M. M. சுப்பிரமணியம்
(காரைக்குடி)
மானேஜர்
யுனைட்டெட் கமர்ஷியல்
பாங்க்
3090. கீழராஜவீதி
புதுக்கோட்டை

வீர. வீரப்பன் (புதுவயல்)
51, கீழ ஆவணிமூலவீதி
மதுரை சௌத் இந்தியா
கார்ப்பரேஷன்
மதுரை—1

Dr.J. பழனியப்பன் M.B.B.S.
(வலையபட்டி)
5. காமராஜ் நகர் 3ம் வீதி
சொக்கிகுளம்
மதுரை—2

RM. AR. சுப்பிரமணியன்
செட்டியார்
(கண்டரமாணிக்கம்)
SP. M. மெடிக்கல் மார்ட்
கீழச்சித்திரை வீதி
மதுரை

A. PR. மருதப்பன்
(வேகுப்பட்டி)
வள்ளி இல்லம்
32A. கம்பர் தெரு
S. S. காலனி
மதுரை—16.

Dr. S. சுவாமிநாதன்
M.B.B.S. (உ. புதுப்பட்டி)
18. சரோஜினி தெரு
சின்னசொக்கி குளம்
மதுரை-2.

# பூலாங்குறிச்சி நகரமடத் திறப்பு விழா



நகரத்தார் பெருமக்கள் சூழ்ந்திருக்க தேச பக்தச்செல்வர், தமிழ்நாடு சுதந்திராக் கட்சித் தலைவர் சா. கணேசன் அவர்கள் நகர மடத்தைத் திறந்து வைக்கிறார்கள்.

ஊராட்சித் தலைவர் இராம குமரப்பன் அவர்கள் தொழிற்செல்வர். வ.செ. சிவலிங்கம் செட்டியார் அவர்களுக்குப் பாராட்டுப் பத்திரம் வாசித்துத் தருகிறார்கள்.



## நகர மடக்கட்டிடம்

பூலாங்குரிச்சியில் தொழிற் செல்வர் வ. செ. சிவலிங்கம் செட்டியார் அவர்கள் நன் கொடையால் உருவான நகர மடத்தை, பிப்ரவரித் திங்கள் முதல் நாள் மாலை மூன்று மணி அளவில் தேசபக்தச் செல்வர் திரு சா. கணேசன் அவர்கள் திறந்து வைத்தார்கள்.

ஊராட்சித் தலைவர் இராம குமரப்பன் அவர்கள் அனைவரை யும் வரவேற்று, நகரமடத்தைக் கட்டி உதவிய சிவலிங்கம் செட்டி யார் அவர்களுக்கு ஊர் மக்கள் சார்பில் வாழ்த்துமடல் வாசித்துக் கொடுத்தார்கள்.

விழாத் தலைவர்—சா. கணேசன் அவர்கள் உரையாற்றுகிற பொழுது, "இந்த இடத்தை வெறும் பொழுதுபோக்கிற்காக இல்லாமல் சமூக நன்மைகளுக்கு உதவும் வகையில் பயன்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் இந்த அறத்தைச் செய்தவர் களுக்கு உண்மையிலேயே நன்றி செலுத்தியவர்களாக முடியும். வெறும் வார்த்தைகளால் நன்றி சொல்லிப்பயனில்லை. நல்ல முறை யில் இது பயன்படுத்தப்பட்டால் மேலும் பல நல்ல காரியங்களைத் தர்மங்களைச் செய்ய சிவலிங்கம் செட்டியார் அவர்களுக்கும் தோன் றும். அதைப் பார்த்து மற்றவர் களுக்கும் செய்யத் தோன்றும்." என்று குறிப்பிட்டார்கள்.

வேகுப்பட்டி ஊராட்சித்தலைவர் ஏ வி இராமநாதச் செட்டியார் எம். ஏ. அவர்கள் பாராட்டுரை வழங்கினார்கள்.

"செல்வ வசதி உள்ளவர் களில் பலருக்கு நல்லது செய்ய வேண்டும் என்ற எண்ணம் இருக் கிறது. அதை ஊர் மக்கள் பயன் படுத்திக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் செய்கிறவர் களுக்கு மேலும் ஆர்வம் ஏற்படும். அது பற்றிப் பலவகையான எண் ணங்கள் ஏற்பட்டால் எப்படி நல்ல வற்றைச் செய்யமுடியும். தலைவர் அவர்கள் கூறியபடி பயனுள்ள முறையில் இந்த நகர மடம் பயன் படப்பலசெய்தித்தாள்களையும்என் செலவிலேயே தருவித்துத் தருகி றேன்." என்று நகரமடத்தை நன் கொடையாகக் கட்டி வழங்கிய சிவலிங்கம் செட்டியார் அவர்கள் குறிப்பிட்டார்கள். ராம குமரப்பன் அவர்கள் நன்றி கூற விழா இனிது முடிந்தது.